Registered No. M. 3536.

தனிப்பிரதி விலை { உள்நாடு அணா 1 / சிலோன் ,, 1¼ / மலேயா, பர்மா ,, 2 }

# நவசக்தி

"NAVASAKTI"

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

சந்தா விவரம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 4 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 | 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

விளம்பர விகிதம்

பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 6 0
சில்லறை விளம்பரம் 1 அங்.0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு கசு ஈசுவரஹு புரட்டாசிமீ உகூ (15—10—1937) வெள்ளிக்கிழமை பரல் உக

## வந்தேமாதரம்

II

க. இனிய நீர்ப்பெருக்கினை ! இன்கனி வளத்தினை !
தனி நறு மலயத் தண்காற் சிறப்பினை !
பைந்நிறப் பழனம் பரவிய வடிவினை ! (வந்தே)

உ. வெண்ணிலாக் கதிர் மகிழ் விரித்திடு மிரவினை !
மலர் மணிப் பூத்திகழ் மரன் பல செறிந்தனை !
குறு நகை யின்சொலார் குலவிய மாண்பினை !
நல்குவை யின்பம் வரம்பல நல்குவை ! (வந்தே)

ந. முப்பது கோடிவாய் (நின்னிசை) முழங்கவும்
அறுபது கோடி தோளுயர்ந் துனக் காற்றவும்
" திறனிலாள் " என்றுனை யாவனே செப்புவன் ?
அருந்திற லுடையாய் ! அருளினை போற்றி !
பொருந்தலர் படைபுறத் தொழித்திடும் பொற்பினை
(வந்தே)

ச. நீயே வித்தை, நீயே தருமம் !
நீயே யிதயம், நீயே மருமம் !
உடலகத் திருக்கு முயிரு மன்னீயே ! (வந்தே)

ரு. தடந்தோ ளகலாச் சக்தி நீ ! யம்மே !
சித்த நீங்காதுறு பத்தியு நீயே !
ஆலயந் தோறு மணி பெற விளங்கும்
தெய்விக வடிவமுந் தேவியிங் குனதே ! (வந்தே)

சு. ஒருபது படைகொளு முமையவணீயே !
கமல மெல் லிதழ்களிற் களித்திடுங் கமலை நீ !
வித்தை நன்கருளும் வெண்மலர்த் தேவி நீ! (வந்தே)

எ. போற்றி ! வான் செல்வீ, புரையிலை நிகரிலை !
இனிய நீர்ப் பெருக்கினை, இன்கனி வளத்தினை !
சாமள நிறத்தினை, சரளமாந் தகையினை !
இனியபுன் முறுவலாய் ! இலங்குநல் லணியினை !
தரித்தெமைக் காப்பாய், தாயே ! போற்றி ! (வந்தே)

—பாரதியார்.

# இராஜஸ்தானத்தின் இளஞ் சூரியன்

மார்வாரின் மன்னரான ராஜா - ஜஸ்வந்த் சிங் 1678-ல் இறந்தார். அவர் அக்காலத்தில் மொகலாய சக்கரவர்த்தியாக விளங்கிய அவுரங்கசீப்பின் அதிகாரத்துக்குட்பட்டு நடந்து வந்தார். ஆனுல் மொகலாய மன்னர் அவரை நம்பவில்லை. மார்வாரின் ராணிகள் ஐவர். அவர்களில் மூவர் உடன்கட்டை யேறினர். சின்னுட்களில் மற்றைய இருவரும் இரு ஆண் குழவிகளைக் கருவுயிர்த்தனர். ஒரு பாலன் இறந்து விட்டான். மற்றவனே அமார் சிங். அமார்சிங்கை அரியணையில் ஏற்றுவிக்கவே பெரு முயற்சி செய்தவன் துர்க்கா தாஸ்.

### சக்ரவர்த்தியின் பிடிவாதம்

லாகூரிலிருந்து ராதர்கள்கொண்ட ஒரு கோஷ்டியார் டெல்லியை அடைந்தனர்; ஆண்டு மன்னரிடம் அமார்சிங்கை ராணுவாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென வேண்டிக்கொண்டனர். ஆனுல் அவுரங்கசீப் மறுத்துவிட்டார். நான்கு மாதங்கள் கடந்தன. ராணியுடனும் அமார்சிங்குடனும் மார்வார் பிரதானிகள் டெல்லியை நண்ணினர்; அங்கு ஒரு கூடாரமடித்து அதில் அரச குடும்பத்தினரைப் பத்திரப் படுத்தினர்; பின்னர் மொகலாய மன்னரிடம் சென்று அமாரை ராணுவாக அங்கீகரிக்கும்படி கோரினர். ஆனுல் மன்னர் அவர்தம் வேண்டுகோள்களைச் செவி மடுக்கவில்லை.

### ஷுஜாவின் வீரமொழி

ஷுஜா சமஸ்தானகவி. அவர் கூடாரத்தில் வீற்றிருந்தார்; ராதர் வம்சத்தாரின் பண்டைப் பெருமையினையும், வெற்றிச் சிறப்பினையும், அவர்தம் கடனையும் பற்றி வீரஞ்செறிந்த மொழிகளால் ஓர் அருஞ் சொற்பொழிவாற்றினுர். யாவரும் எழுந்து நின்று உயர்த்திய வாட்களுடன் அன்னை பவானியின் அடிபணிந்தனர்; சூளுரைபுகன்றனர்; 'எவ்வாற்றுனும் அமாரை மார்வாரின் ராணுவாகச் செய்வோம்' எனத்துணிவு கொண்டனர்.

### துர்க்காதாஸின் அறவுரை

துர்க்காதாஸ் மார்வாரின் மந்திரிமாருள் ஒருவன்; வீரமே யுருவென விளங்கு மேதகையோன். அவன் வீரரை நோக்கிக் கூறுவான்:—

"அன்பர்காள்! நாட்டின் பணிக்காக நாம் யாவற்றையும் தியாகம் செய்யத் தயாரா யிருத்தல் வேண்டும். நம் அரசியையும் ராணு அமாரையும் காப்பது நம் கடன். அதற்காக உயிரையும் இழக்க அஞ்சாதீர்! ராதர் வம்சத்தின் வீரத்தை டெல்லி காணட்டும்.

"நான் சில வீரர்களுடன் ராணியையும் அமாரையும் பாதுகாப்புடன் மார்வார் கொண்டு சேர்க்கிறேன். அதுகாறும் ஒரு தாதி ராணியாகவும் ஒரு சிறுவன் அமாராகவும் நடிக்கட்டும்" எனக் கூறினுன்.

### குழப்பம்

தாஸின் முறையை யாவரும் ஏகோபித்து ஒப்புக் கொண்டனர். ஆனுல் அதனையேற்று நடத்துமுன் சக்ரவர்த்தியின் தூதுவர் பலர் வந்துவிட்டனர். அமார் ராணியுடன் வதிவதே முறையென்றும், வயதானவுடன் டெல்லிக்கு அவனை யனுப்புவதாயும் துர்க்காதாஸ் கூறிப் பார்த்தான். ஆனுல் மொகலாயர் கேட்கவில்லை; தஞ் சேனையில் ஒருபகுதியினை அழைத்து ராணியையும், அமாரையும் கவர்ந்து வருமாறு பணித்தனர். இராஜபுத்திரர் வீரா வேசங்கொண்டனர். துப்பாக்கிகள் வெடித்தன; குதிரைகள் பறந்தன; வாட்கள் மின்னின. ஒரே குழப்பம் நிலவியது. தன் ராணுவத் தலைவர்களை மொகலாயருடன் கடும்போர் செய்யும்படி பணித்துவிட்டுத் துர்க்காதாஸ் ராணியுடனும் அமாருடனும் தப்பிவிட்டான்.

## துஞ்சவும் துணிந்தனன்

## அஞ்சா நெஞ்சினன்

## வீர துர்க்கா தாஸ்

—[o]—

"செல்வம் வந்துற்றகாலை அதனுல் செருக்குற்று முறை திறம்பார்; வறுமையில் உழன்று இடர்படினும் செம்மை நெறியை நெகிழவிடார்; அவையஞ்சாது புலவர் குழாத்திடைத் திலகமென்ன இலங்குவார்; போர்முனையில் அஞ்சிப் புறங்கொடார்; வீரமே உருவென விளங்குவார்; நாட்டின் மானத்தைக்காக்க உடல் பொருளாவி மூன்றையும் அர்ப்பணம் செய்வார்; சத்தியம் நிலவவும் தருமம் தழைக்கவும் அருந்தொண்டாற்றுவார்; இவைபோன்ற நற்குணங்கள் கனிந்து விளங்கும் புதல்வரைப் பயந்த அன்னையரே அன்னையர்" என 'ஹிதோபதேசம்' சாற்றுகிறது. துர்க்காதாஸ் ஒரு வீரப்புதல்வன்; அன்னையின் புகழை உலகில் பொன்ருது நிறுவிய உத்தமன்.

(விஜயன்)

### கடும் போர்

மொகலாயரின் [illegible] தார்; உடனே துர்க்காதாஸைப்பின் தொடர்ந்தார். குதிரைகளின் ஓட்டத்தால் கிளம்பிய புழுதி வானத்தே மேகமெனக் கவிழ்ந்தது. எதிரிகள் அருகாமையில் வந்து விட்டனரென்பதை யறிந்தான் தாஸ்; தன் இன்னுயிரீந்தும் அரசினைக்காக்கத் தீர்மானித்தான். ராதர் உயிருக்குத் துணிந்து போராடினர். துர்க்காதாஸ் விஜயனும் வெட்கும்படி யுத்த களத்தில் பொருதான். சிறிதுகாலத்தில் மொகாலாயர் சேனை ஸ்தம்பித்து விட்டது. துர்க்காதாஸுக்கோ படுகாயம். ஆனுல் அவன் அரசியையும் அமாரையும் கண்போன்று பாதுகாத்து வந்தான்; கன்வருமஞ்சும் கடும்இருளில் கானகத்திடையே தனது ஏழு மெய்க்காப்பாளருடன் ராணியையும் அமாரையும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்துச்சென்றனன். யாவரும் சுகமே மார்வாரை யண்மினர்.

### படை யெடுப்பு

அவுரங்கசீப் இதுகண்டு வெகுண்டார்; பல்லாயிரவர் கொண்ட பெரும்படையுடன் ஆஜ்மீரையடைந்தார்; மார்வாரின் மக்கள் விழித்தார்கள்; போர்க்கோலம் பூண்டார்கள்; தாஸ் சேனையைச் சிறப்பாக அணிவகுத்தான்; ராணியையும் அமாரையும் உதயபுரி ராணுவின் பாதுகாப்பில் விடுத்தான்.

ராதர் வீரர்; தேவரைப்போன்று போராடினர். ஆனுல் மொகலாயரின் கடல்போன்ற படை முன் சிறுபான்மையர் என்செய வியலும்? ஜோதிபுரி, மொகலாயர் வசப்பட்டது. மார்வாரை அவுரங்கசீப் தம் நாட்டுடன் இணைத்துத்துக்கொண்டார்.

### மேவாரின் பேருதவி

மேவாரின் ராணுவான ராஜசிங் துர்க்காதாஸின் உதவிக்குவந்தார்; அமாரை ராணுவாக்க முற்பட்டார்; செஸோதயா வம்சத்தாரும் ராதர் வம்சத்தாரும் ஒன்றுபட்டனர். துர்க்காதாஸ் ஓர் அரிய சூழ்ச்சி செய்தான்; அதன்படி மார்வாரில் கவர்னராயிருந்த சக்ரவர்த்தியின் புதல்வர் அக்பரை அரியாசனத்தில் ஏற்றுவிப்பதாகவும் அவரே ஹிந்துக்களுக்கும் மொகலாயருக்கும் நீதி செலுத்தத் தக்கவரென்றும் கூறினுன்; அக்பரும் அதனை நம்பினுர்; அவர்தம் உதவியுடன் தந்தைக்கு எதிராகப் புரட்சி செய்யவும் முற்பட்டார்.

### புரட்சி

அக்பர் புரட்சியை யாரம்பித்து விட்டார். இச்செய்தி கிடைத்தவுடன் மொகலாய மன்னர் சிறிது கலங்கினுர். அவருக்கு வயதாகி விட்டது. ஒருபெருத்த சேனையை ஆண்டு அனுப்பினுர்; மேலும் ஒரு கடிதம் எழுதினுர்.

"அரும் புதல்வன் அக்பருக்கு, நீ உனது திறமையால் இராஜ புத்திரரை நம் வலைக்குட் புகுத்துவது கண்டு மகிழ்வெய்துகிறேன். உனது முயற்சி வெற்றியளிப்பதாக". அதனை ஒற்றர் மூலம் துர்க்காதாஸின் அறையில் வைத்து விட்டார்.

### சந்தேகம்

துர்க்காதாஸ் காலையில் வந்தவுடன் அரசரின் முத்திரை பெற்ற லிகிதத்தைக் கண்டனன். அதனை அவன் உண்மையெனவே கருதினன். அக்பரின் சேனுதிபதியையும் காணும். சந்தேகம் வலுத்தது. துர்க்காதாஸ்; தனது உதவி அக்பருக்குக் கிட்டாதெனக் கூறி மார்வார் சென்றுவிட்டனன். அக்பர் தமது நிலையினை ஓர்ந்தார். சக்ரவர்த்தியின் படை பின் தொடர்கிறது.

### மீட்சி

துர்க்காதாஸ் உண்மையை உணர்ந்தான்; சக்ரவர்த்தியின் சூழ்சியைக் கடிந்தான்; அக்பருடனும் அமாருடனும் தென் இந்தியாவை நோக்கி வந்தான்; நர்மதையைக் கடந்து மராத்தியரின் நாடடைந்தான். ரெய்கார் கோட்டையில் யாவரும் வந்து சேர்ந்தனர். மொகலாயர் திரும்பிச்சென்று விட்டனர். துர்க்காதாஸின் உடலெங்கும் காயம், மெய்யெங்கும் வலி. ஆனுல் உள்ளமெங்கும்வீரம்; இதயத்தில் தொண்டுசெய்ய ஆர்வம். மார்வாரின் மன்னவன் காப்பாற்றப்பட்டான். துர்க்காதாஸ் நாட்டின் மானத்தையும் காப்பாற்றி விட்டான்.

### இளஞ் சூரியன்

இரண்டு ஆண்டுகள் இனிது கழிந்தன. அவுரங்கசீப் இறந்தார். அவருக்குப்பின் பகதூர்ஷா பாதுஷாவானுர். அவர் மார்வாரின் சுதந்திரத்தை அங்கீகாரம் செய்தார். வெற்றி முரசுடன் அமாருக்கு முடி சூட்டப்பட்டது. துர்க்காதாஸ் கண் குளிரக்கண்டு களித்தனன்; தனது வாழ்க்கையின் உன்னத அபிலாஷை பூர்த்தியானது பற்றி அவன் ஆனந்தமுற்றுன். பின்னர் சிலநாளில் அவனது ஆத்மா உலகில் பொன்ருப் புகழை நிறுத்தி விண்ணேகியது. இராஜஸ்தானத்தின் இளஞ் சூரியனுகத் திகழ்ந்தான் வீர துர்க்காதாஸ். வீரர்புகழ் ஓங்குக!




வந்தே மாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கக ஈசுவரஞு புரட்டாசிமீ உகூ (15—10—1937) வெள்ளிக்கிழமை பரல் உக


## சிலம்பொலி

### திருவள்ளுவர்

#### அதிகாரம் 2

திரு. வி. க.

(தொடர்ச்சி)

பெரியோர் ஈண்டு 'வானோர்' எனப்பட்டார். ஐந்து பூதங்களில் வான் ஒன்று. உடலும் உலகும் ஐந்து பூதங்களால் ஆக்கப்பட்டன. உயிர்கள் ஐந்து பூதங்களை இருப்பிடமாகக் கொண்டு வாழினும், அதனதன் அறிவு வளத்துக்கேற்ப, அது அது ஒவ்வொரு பூதத்தில் உறைந்து நிற்கும். அவ்வவ் வளவில் அவ்வவ்வுயிர் விளக்கமுற்றுத் திகழும்.

சிலர் ஐம்பூதவுடலில் வாழினும் அவர் நான்கு பூதங்களில் தோயாது, வான் என்னும் ஆகாயத்தில் மட்டும் பெரிதும் தோய்ந்து நிற்பர். அவரே வானோர் எனப்படுவர்.

ஈண்டு என்றது மற்ற உலகங்களை நீக்கி இவ்வுலகைக் குறிப்பது. என்னை? வழிபாடுசெய்து பேறுபெறுதற்கு இவ்வுலகமே சிறந்த கருவியாய்த் துணை செய்தலின் என்க. இவ்வுலகில் மண் தத்துவம் அதிகம். மண்தத்துவமுள்ள இடத்தில் மற்றத்தத்துவங்களெல்லாம் இருக்கும். ஆன்மாவின் அறியாமைக் கறையைக் கழுவுதற்குத் தத்துவங்களெல்லாம் சேர்ந்த ஒருகருவி தேவை. அக்கருவியே இம்மண்ணுலகம். முள்ளை முள்ளால் எடுப்பதும், அழுக்கை அழுக்கால் கழுவுவதும் கண்கூடு.

மற்ற உலகங்கட்குத் தத்துவத் தொடர்பு இல்லையோ எனில் உண்டு என்க. ஆனுல் சிலதத்துவம் ஒடுங்கிச் செயல் குன்றிக் கிடக்கும். வழிபாட்டுக்கு, எத் தத்துவமும் ஒடுங்காது, விளங்கியுள்ள இவ்வுலகமே சிறந்ததென்று அநுபவ ஞானிகளால் கொள்ளப்பட்டது. அது பற்றியே ஆசிரியர் "ஈண்டு" என்றுர்.

"வானிடத் தவரும் மண்மேல் வந்தரன்தனை அர்ச்சிப்பர்" - சித்தியார்: உ; கஉ.

பூசனை - பூசை; பூஜா; வழிபாடு; ஆராதனை.

பூசை இருவிதம். அவை அகப்பூசை, புறப்பூசை என்பன.

சிறப்பொடு - சிறப்புடன்; மேம்பாட்டுடன்; மேன்மையுடன். சிறப்புடன் செய்யப்படும் பூசை என்க.

சிறப்பொடு என்பதற்குத் திருவிழாவொடு என்று பொருள் கோடலுமொன்று. "கோயில்புக்கு நங்கைக்குச் சிறப்பயர்ந்த செங்குட்டுவற்கு"—சிலப்பதிகாரம்: உகூ: உரைப்பாட்டு; "சென்றுகை தொழுது சிறப்புச் செய்தலின்"—மணிமேகலை: க0: எஉ.

திருவிழா ஒவ்வொரு போது செய்யப்படுவது. அது நைமித்திகம் எனப்படும்.

சிறப்பொடு என்பதை நைமித்திகமாகக் கொள்வோர், பூசையை நித்தியமாகக் கொள்வது பொருத்தம். நித்தியம், நாடோறுஞ் செய்யப்படும் பூசை.

சிறப்பு - நைமித்திகம்.

பூசை - நித்தியம்.

செல்லாது - நடைபெறுது; நடவாது; ஆற்ற இயலாது என்றபடி.

மக்களுக்கு வழிபாடு இன்றியமையாதது. வழிபாடே மக்களை மேன்மைப்படுத்துவது. வழிபாடில்லா மக்கள் மாக்களாவார்கள். வழிபாடு மக்களுக்கு. இயற்கை. இயற்கையை விடுத்து வழுக்கி வீழ்வது கேட்டைத் தேடுவதாகும்.

உயிர் பலதிறப் பிறவிகள் தாங்கி மக்கட் பிறவி எய்துகிறது. மக்கட் பிறவியில் உயிர்க்கு ஆருவதறிவு முகிழ்க்கிறது. ஆருவதறிவு கடவுளுண்மையை உணரும் இயல்பினது. அவ்வியல்பைப் பண்படுத்தினுலன்றிக் கடவுளுண்மையை உணர்தல் இயலாது. அதற்கு வழிபாடு வேண்டற்பாலது. வழிபாட்டிலிறங்கா மக்களின் ஆருவதறிவு சிறைப்பட்டு ஒளி குன்றும். ஆருவ தறிவின் ஒளி குன்றினுல் மக்கள் விலங்காதல் உறுதி.

ஆருவதறிவு பண்பட்டால் மற்ற ஐந்தறிவும் சால்புறும். ஆருவ தறிவு பண்படா தொழியின், மற்ற ஐந்தறிவும் மக்கட் பிறவியை இடர்ப்படுத்தும். அதனுல் உலகமும்பெருந்துன்பமுறும்.

வழிபாட்டு முறைகள் பல வகை. அவை அவரவர் அறிவாற்றலுக்குத் தக்கவாறு அமைந்துள்ளன. மக்கள் பிறவி தாங்கினோர்க்கு எவ்வகை வழிபாடாதல் இருத்தல் சிறப்பு.

வழிபாட்டுக்குக் கவலை இருத்தல் கூடாது; மகிழ்ச்சி இருத்தல் வேண்டும். வழிபாட்டுக்கு மகிழ்ச்சி அடிப்படை என்றுங் கூறலாம். மகிழ்ச்சியுள்ள இடத்திலேயே வழிபாடு சிறப்புடன் நடைபெறும். கவலையுள்ள இடத்தில் வழிபாடு சிறப்புடன் நடைபெறுது.

பூசை சிறப்பொடு நடத்தப்பட வேண்டுமாதலால், "சிறப்பொடு பூசனை" என்றுர்.

பூசனை சிறப்பொடு செய்யப் பெறல் வேண்டும். அதுவே பயன் தருவது. சிறப்பில் பூசனை பயன் தாராது. அது போலியே யாகும்.

மனம் ஒன்றிச் செய்யப்படும் பூசை சிறப்புடையது. மனம் ஒன்றுது செய்யப்படும் பூசை சிறப்புடையதாகாது. உவகையுடையார் மனம் பூசை நேரத்தில் விரைவில் ஒன்றும்; கவலையுடையார் மனம் அந்நேரத்தில் விரைவில் ஒன்றுது; ஒன்றுதல் அரிதென்றே கூறலாம்.

உவகைக்கு வளம் வேண்டும். வளம் இல்லையேல் உவகை ஏது? உவகையைப் போக்குவது வறுமை. வறுமை கவலையைப் பெருக்கும். கவலையுள்ள இடத்தில் பூசை சிறப்புடன் எங்ஙனஞ் செல்லும்? வறுமை நீங்கி வளம் பெருக என்ன வேண்டும்? மழை வேண்டும். சிறப்பொடு பூசனை செல்வதற்கும் மழை தேவை என்று உணர்க. அதுபற்றியே "வானம் வறக்குமேல்... ..........சிறப்பொடு பூசனை செல்லாது" என்றுர்.

வானோர் பூசை என்று ஈண்டுக்குறிக்கப்படுவானேன் என்று சிலர் கருதலாம். தனித்த கடவுள் பூசையையும், மலமுடையார் பூசையையும் விலக்க வேண்டியே வானோர்பூசை என்று ஈண்டுக் குறிக்கப்பட்டது. வாக்கு மனங் கடந்து நிற்கும் தனித்த கடவுளைப் பூசித்தல் வாக்குமனமுடையாரால் இயலாது. மலமுடையாரைப் பூசித்தால் மலம்நீங்குதல் அரிது. குருடர்க்குக் குருடர் எங்ஙனம் வழிகாட்டுதல் கூடும்? வானோர் வாக்குமனங் கடந்த கடவுளுமல்லர்; மலமுடைய மனிதருமல்லர்; அவர் கடவுள் ஒளிநீக்கமின்றி விளங்கும் உள்ள முடைய குருமார். அவரைப் பூசித்தால் பூசனை அவர் வாயிலாகக் கடவுளைச் சேரும். அப்பூசனையால் மல மறுதற்கும் இடமுண்டாகும். அதனுல் வானோர் பூசை என்று ஈண்டுக் குறிக்கப்பட்டது.

பூசைக்கு ஒழுக்கந் தேவை. ஒழுக்கத்துக்கு அறிகுறிதானமும் தவமும். ஒழுக்கமும், தானமும் தவமும் உடையாரே பூசைக்கு உரியர். இந்நுட்பத்தை யுணர்த்துதற் பொருட்டு ஆசிரியர், ஒழுக்கம் உரைத்து, தானதவங்கூறி, அவைகளைத் தொடர்ந்து பூசனையைச் சொன்னுர்.

ஒழுக்கத்துக்கும், தான தவத்துக்கும் மழை துணைசெய்வது போல வானோர் பூசைக்கும் அது துணைசெய்யும். மழை பொய்த்தால் ஒழுக்கம், தானம், தவம், பூசை முதலியவற்றிற்கெல்லாம் ஊறு நேரும். இதைக் குறிக்கவே "வானம்வறக்கு மேல்...." என்றுர். வானம் வறளின் பூமிவறளும்; பூமிவறண்டால் வளம் வறளும்; வளம் வறண்டால் வயிறு வறளும்; வயிறு வறண்டால் ஒழுக்கம், தானம், தவம், பூசை முதலிய யாவும் வறளும்.

வானோர் பூசைக்கும் மழை அவசியம் தேவை எனில் மழையின் மாண்பைச் சொல்லவும் வேண்டுமோ?

10

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் [றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

(பொ - ள்) எல்லாம் - எல்லாவற்றையும், கெடுப்பதூஉம் - அழிப்பதும், கெட்டார்க்கு - (அவை) அழியப்பெற்ருர்க்கு, சார்வாய் - துணையாகி, மற்று - மீண்டும், ஆங்கே - அவ்விடத்தே, எடுப்பதூஉம் - உண்டாக்குவதும், மழை - மழை.

(க - து) அழிப்பதும் ஆக்குவதும் மழை.

(வி - தி) எல்லாம் 'கெடுப்பதூஉம்', எல்லாம் 'எடுப்பதூஉம்' என்று கொண்டு பொருள் கொள்க.

"* * * * எல்லாம் வல்லது மழை" என்று பொருள் கூறி 'வல்லதென்பது அவாய் நிலையான் வந்தது' என்று குறிப்பு வரைந்துள்ளார் பரிமேலழகர்.

எல்லாம் - எல்லாவற்றையும்; நிலவளம், கடல்வளம், ஒழுக்கம், தானம், தவம், பூசை முதலிய எல்லாவற்றையும்.

எல்லாம் கெடுப்பதூஉம் - எல்லாவற்றையும் அழிப்பதும்; மழை பெய்யாது எல்லாவற்றையும் அழிப்பதும்.

மழை முற்றும் பெய்யாமலும், அகாலத்திற் பெய்தும், அதிகம் பெய்தும் கேடு விளைப்பதுண்டு.

கெடுத்தல் - அழித்தல்; வறுமைப் படுத்தல்.

கெட்டார்க்கு - அவை அழியப்பெற்ருர்க்கு; (அவை - எல்லாம்)

மழையின்மையால் அஃறிணை யுலகுங் கெடும்; உயர்திணையுலகுங் கெடும். ஈண்டுக் "கெட்டார்க்கு" என்று உயர்திணை யுலகை மட்டுங் குறித்ததென்னை என்று சிலர் ஐயுறலாம். 'கெட்டார்க்கு' என்னுஞ் சொல்லின் தோற்றமே உயர்திணையைக் குறிப்பது; பொருள் இருதிணையையும் உணர்த்துவது. அஃறிணை யுலகையும், உயர்திணை யுலகையும் ஒருங்கே எண்ணி, 'கெட்டார்க்கு' என்று ஆசிரியர் கூறினர். "விட்டாரோ * * * * உயர்திணையையும் அஃறிணையையும் எண்ணி உயர்திணையான் முடித்தார்"—சிலப்பதிகாரம்: எ: நக: பழைய குறிப்புரை.

சார்வாய் - துணையாய்; கெட்டவர்க்குச் சார்விடமாய்; கேடுற்றவர்க்குத் துணைபுரியக் கருணை எழுதல் இயல்பு. சார்வு கருணைக் குறிப்பு. மழை இறையின் கருணைக்கு அறிகுறி.

மற்று—மீண்டும்; " * * * மயலாகும் மற்றும் பெயர்த்து"—திருக்குறள்: துறவு.

ஆங்கே - அவ்விடத்தே; கேடுற்ற இடத்தே என்றபடி.

(எல்லாம்) எடுப்பதூவும் - எல்லாவற்றையும் உண்டாக்குவதும்; மழை பெய்து எல்லாவற்றையும் உண்டாக்குவதும்.

மழை காலத்திற் பெய்தும், அகாலத்திற் பெய்யாமலும், அளவாகப் பெய்தும் கெட்டனவற்றை எடுக்கும்.

தோழிலாளர் பகுதி

# ஆண் மேஸ்திரிகள் அட்டகாசம்!

## பெண் தொழிலாளரின் பரிதாபம்

### விடிவில்லாதவற்கு விமோசனமுண்டா?

நெஞ்சை அள்ளும் நகரக் காட்சி

**நகரங்களிலே ஏழை மக்கள் படுந்துன்பம் சொல்லி முடியாது. ஆடுமாடுகள் அடைபடுவதுபோல அவர்கள் சிறு அறைகளிலே அடைந்து கிடக்கிறார்கள். வாழ்வின் இரகசிய காரியங்களைப் பகிரங்கமாகவே நடத்தவேண்டி யிருக்கிறது. வேறு வழியில்லை. மனைவியைப் பிரிந்து பல தொழிலாளர் இருக்கிறார். கலியாணமாகாத இளம் பெண்களும் தொழிற் சாலைகளில் வேலை செய்கிறார்கள். இதனால் ஒழுக்கக்கேடு உண்டாகிறது. நோய் பரவுகிறது. தொழிற்சாலைகளிலே பெண் தொழிலாளர் துன்பம் பெரிது. ஆண் மேஸ்திரிகள் பெண் தொழிலாளர்க் கிழைக்கும் அநீதியை எழுத முடியாது. இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன? நகர்ப்புறங்களில் சரியானபடி வீட்டு வசதியின்மையே.**

(திரு. ஜே. எம். குமரப்பா)

இந்தியாவில் கைத்தொழில் வரவர அபிவிருத்தி யடைந்துவருகிறது. ஆயினும் திறமையான சமூக நிர்வகிப்பு அமையாதது கைத்தொழில் உலகின் துரதிர்ஷ்டமே. செய்யவேண்டிய கடைமைகளை மறந்து லாபம் ஒன்றையே குறியாகக் கொள்ளும்வரை எந்தத் தொழிலும் உருப்படாது. இவ்விஷயத்தை நாம் இன்னமும் அறிந்து கொள்ளவில்லை. ஆகவே மனித சமூகம் கஷ்டப்படுவதற்கு இவ்வகையில் நாமே காரணராவோம். நகரங்களிலே இப்பொழுது ஜனத்தொகை அதிகரித்துவிட்டது. அதற்குக் காரணம் அவ்விடங்களில் கைத்தொழில் பெருகினமையே. இப்பொழுதே நாம் சமூக பொருளாதார நிலைகளை அறிந்துள்ளோம். வீட்டு வசதியின் சிறப்பை உணர்ந்துள்ளோம்.

ஐம்பது வருஷப் பெருக்கம்

சென்ற ஐம்பது வருஷங்களில் பம்பாய் கல்கத்தா போன்ற பெரிய மாநகரங்கள்ஜனத்தொகையில்இருமடங்கும், மும்மடங்கு மாகிவிட்டன. சென்னை, மதுரை முதலான நகரங்களின் ஜனத்தொகை ஏராளமாகப் பெருகிவிட்டது. புதிய புதிய கைத்தொழில் நகரங்களும் தோன்றி விட்டன. இவ்விதம் நகரங்களின் ஜனத்தொகை பெருகக் காரணமென்ன? கிராமங்களிலுள்ள மக்கள் நகரங்களை நோக்கினார்கள்; வயிற்றுப் பிழைப்புக்கு வகை தேடினார்கள்; தொழிற்சாலைகளில் வேலை பெற்றார்கள். இதுவே காரணம். பம்பாய், கல்கத்தா முதலிய பட்டணங்களுக்குச் சென்னையிலிருந்து கூட மக்கள் வருகிறார்கள்.

துர்ப்பாக்கியம்

இந்தவிதமாக நகரங்களில் ஜனநெருக்கம் அதிகமாகவே வீட்டுவசதி விஷயமும் முக்கியமான ஒன்றாகிவிட்டது. ஒரு சிறு வீட்டில் 'கஜ கஜ' வென்று பலர் வசிப்பது, அவ்வீடுகள் வசிப்பதற்கு யோக்கியமின்றியிருப்பது, சுகாதாரவசதியின்றி யிருப்பது, வியாதி பரவுவது, ஏராளமான மரண விகிதம் ஆகியஇந்தத் துர்ப்பாக்கியங்கள் யாவும் பெரிய நகரங்களில் உள்ளன.

நகரங்களில் வசிக்கும் மக்களில் ஒவ்வொருவருக்கும் தனித்தனி வீடு அளிப்பதற்கு இடமில்லை. அதனால் ஜனநெருக்கம் அதிகமாகிறது. பம்பாய் நகரில் ஓர் அறையில் குறைந்தது நால்வர் வசிக்கிறார். தொழிலாளர்களிலே 95 சதவிகிதம் சிறுஅறைகளில் வசிக்கிறார். ஓர் அறையில் சுமார் ஆறு பேர் முதல் ஒன்பது பேர் வரையில் குடியிருக்கிறார். ஆனால் லண்டன் மாநகரில்கூட அவ்விதமில்லை. மொத்த ஜனத்தொகையில் ஆறு சதவிகிதத்தவரே ஓர் அறையுள்ள விடங்களில் குடியிருக்கிறார். அதுவும் சராசரி ஓர் அறைக்கு இருவருக்குமேல் வசிப்பதில்லை.

ஆடு மாடுகளா?

ஆடு மாடுகளைப் பட்டியில் அடைப்பதுபோல் குடும்பம் நடத்துகிறவர்களை இந்த மாதிரி அறைகளில் அடைத்து வைத்தால் எப்படியிருக்கும்? வாழ்விலே கௌரவம், அகௌரவம் மட்டு, மரியாதை என்று சொல்வார்களே! அவ் விஷயங்கள் என்னவென்றே தெரியாதபடி ஆயிரக் கணக்கான இளைஞர் மேற்கண்ட நெருக்கடியான வாசத்தினால் வளர்க்கப்படுகிறார்கள்.

என்ன பரிதாபம்!

ஒரு குடும்பத்தில் இரகசியமாக நடக்கும் காரியங்களும் உண்டு; பகிரங்கமாகச் செய்யும் காரியங்களும் உண்டு. ஆண் பெண் இருபாலாரும் எல்லாவிதமான காரியங்களுக்கும் அந்த அறையையே உபயோகித்துக் கொள்கின்றனர். இஃது என்ன பரிதாபம்! வாழ்க்கையில் ஏற்படும், சுகம், துக்கம், கஷ்டம் முதலிய எல்லாவற்றையும் அங்கேயே சுற்றியுள்ள விடங்களில் கண்கூடாகக் காணலாம். ஒரு வீட்டில் சுபகாரியம் நடக்கும். மற்றொரு வீட்டில் கருமாந்திரம் நடைபெறும். ஒரு வீட்டில் குழந்தை ஜனனமாயிருக்கும். இன்னொரு வீட்டில் அகாலமரணம் சம்பவித்திருக்கும். இம்மாதிரியானவைகளை நன்றாகப் பார்க்கலாம்.

சுயமரியாதையுள்ள யாராவது மேற்கண்ட விதமாக வாழச் சம்மதிப்பார்களா? அவர்கள் தங்கள் பெண்டு பிள்ளைகளைச்சொந்த ஊரிலேயே விட்டு விடுவதில் ஆச்சரியமென்ன விருக்கிறது!

கல்கத்தாவில் ஆயிரம் ஆடவருக்கு 475 பேரே பெண்டிர். வெகு தொலைவிலிருந்து வரும் தொழிலாளர்களே பெரும்பாலும் தங்கள் குடும்பத்தவரைக் கிராமத்தில் விட்டு வருகிறார். சென்னையிலிருந்து பம்பாய்க்கு வரும் 21 ஆயிரம்பேருக்கு ஆறாயிரம் பெண்களே வருகிறார்கள். பம்பாயின் ஜனத்தொகை 12 லக்ஷம், அதில் பெண்களின் தொகை 4,15,000.

மனைவி யில்லாத புருஷர்;
புருஷரில்லாத மனைவியர்

இந்த விதமாக ஆயிரக்கணக்கான ஆடவர் மனைவிமாரின்றிச் சம்பாதித்துச் சாப்பிட்டுக் கொண்டு மிகுந்த பணத்தை ஊருக்கு அனுப்புகிறார். இதே மாதிரி ஏராளமான பெண்கள் தொழிற்சாலைகளிலும் மற்றவிடங்களிலும் வேலை செய்கிறார்கள். அவர்களிலே பலர் கலியாணமாகாத இளம்பெண்கள். வேறு சிலர் விதவையர். மற்றும் சிலர் திக்கற்ற பெண்கள். இவ்விதம் மனைவியைப் பிரிந்த புருஷரும், புருஷரில்லாத மனைவியரும் அதிகரிக்கவே சமூகத்தில் கெட்ட ஒழுக்கம் மலிந்து போகிறது.

பாதையில் படுத்துறங்குகிறார்

குடும்பமில்லாமல் தனித்து வாழும் இவர்கள் மிகவும் சிக்கனமாக்வாழ நினைக்கிறார்கள். எவ்வளவு சுருக்கமாக வாழ முடியுமோ அவ்வளவு சுருக்கமாக வாழ்ந்துகொண்டு மிகுதிப் பணத்தை ஊருக்கு அனுப்ப அவர்கள் நினைக்கிறார்கள். ஆகவே சுமார் இருபது பேர்வரை ஒன்றுசேர்ந்து ஓர் அறையை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு வசிக்கிறார். இரவுநேர வேலையுள்ளவர் பகலிலும் பகல்நேர வேலையுள்ளவர் இரவிலும் அந்த அறைகளில் வசிக்கிறார். அது கூடச் செலவழிக்க முடியாதவர் எத்தனையோ பேர் இருக்கிறார்? அவர்கள் தெருவில் வசிக்கிறார்கள்; தெரு ஓரத்திலுள்ள நடைபாதைகளில் தூங்குகிறார்கள். வாயிற்படிகளிலும், வராந்தாவிலும் அவர்கள் படுத்துறங்குகிறார்கள். இந்த வீடற்ற தொழிலாளர்க்கு விதவையர் பலர் குறைந்த விலைக்குச் சோறு அளிக்கிறார்.

சங்கடம்

வாழ்க்கைச்செலவு அதிகமாக ஓடிப் போகிறது. ஆதலால் குடும்பமாக வசிப்போர் அநேகர் ஒரிருவருக்குச் சாப்பாடும் போடுகிறார். ஆனால் ஒரு குடும்பத்துக்குள் அந்நியர் வசிப்பது நியாயமா? குடும்ப இரகசியங்கள் பலவிருக்கும். மூன்றுவது மனிதர் குடும்பத்துக் குள்ளிருப்பது சங்கடமன்றோ? குழந்தைகளுக்குச் சிற்சில சமயங்களில் கெட்ட பழக்கம் ஏற்படவும் இது சாதகமாகிறது.

கெட்டவழியில் தூண்டுதல்

தனிமனிதனுக்கு நகரத்தைப் போன்ற நரகம் வேறில்லை. சந்தோஷம், ஓய்வு முதலிய வாழ்க்கை அம்சம் எதுவும் அவனுக்குக் கிடைப்பதில்லை. அதனால் ஆட்சேபிக்கத்தக்க முறைகளில் அவன் மனம் செல்கிறது.

நகர வாழ்வில் உண்டாகும் தொல்லையைச் சொல்லிமுடியாது. சமூகத்திலுள்ள கட்டுத்திட்டங்களும், மரியாதைகளும் மறைந்து விடுகின்றன. ஆண் பெண் வேற்றுமை அறவே ஒழிந்து விடுகிறது. பக்கத்துக் குடும்பத்தாருடன் பழகும் மாதிரியே மாறிவிடுகிறது. மனைவியைப் பிரிந்திருக்கும் புருஷருக்குக் கெட்ட வழிகளில் தூண்டுதல் உண்டாகிறது.

சந்தோஷமே கிடையாது

கிராமங்களிலே தொழிலாளி நடத்தி வந்த வாழ்க்கை வேறு. நகரங்களில் அவன் நடாத்தும் வாழ்வு வேறு. கிராமங்களில் ஏராளமான ஓய்வு அவனுக்குண்டு. நல்ல காற்றுள்ள பிரதேசத்தில் ஊக்கமாக வேலை செய்வான். ஆனால் நகரில் அவ்விதமில்லை. சேர்ந்தாற்போல் அவன் வேலை செய்கிறான். கட்டுப்பாடாக வேலை செய்வதால் அவனது உடலும், மனமும் நோயுறுகின்றன. நல்ல சாப்பாடு கிடையாது. சந்தோஷ மென்பதே இல்லை. இவைகளைப் போக்குவதற்காக அவன் குடிக்கிறான்.

நோய் பரவுகிறது

பம்பாய் அரசாங்கத்தின் புள்ளி விவரப்படி தனியாயுள்ள மனிதனே அதிகம் குடிக்கிறான், குடும்பத்துட னிருப்பவன் அவ்வளவாகக் குடிப்பதில்லை. குடிப்பழக்கம் அதிகமாகவே அவனது துர்நடத்தைகள் பெருகுகின்றன. நகரங்களிலே கெட்டஒழுக்கங்கள் பெருகுகின்றன. வியாதிகள் நகரங்களில் அதிகரிக்கின்றன. தொழிலாளர் தங்கள் கிராமங்களுக்குப் போகும்போது அந்தச் சம்பத்தை அங்கேயும் கொண்டு சேர்க்கின்றனர். இந்த விதமாகப் பட்டணத்து வியாதி கிராமத்துக்கும் பரவுகிறது.

காரணர் யார்?

சமூகத்திலே ஒழுக்கக்கேடு பெருகிவிட்டது. குற்றங்களும் மலிந்து விட்டன. இவற்றிற்குக் காரணர் யார்? கலியாணம் செய்துகொள்ளாது நகர்ப்புறங்களில் திரியும் பெண்கள்; மனைவிமாரை வீட்டில் வைத்து வரும் ஆண்கள்.

ஆகவே சமூகம் கெடாதிருக்கவேண்டுமானால் வீட்டு வசதியை முதலில் கவனிக்கவேண்டும்.

ஆண் மேஸ்திரிகள் அட்டகாசம்

கலியாணமாகாத இளம் பெண்களும் இருக்கிறார்கள். விதவைப் பெண்களும் இருக்கிறார்கள். அவர்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்கிறார்கள். அவர்களை ஆண்மேஸ்திரிகள் தொழிற்சாலைகளில் வேலை வாங்குகிறார்கள். அவர்கள் அந்தப் பெண் தொழிலாளிகளைப் பேசும் வார்த்தைகளை எழுத முடியாது. மேஸ்திரிகள் அப்பெண்களிடம் எவ்வளவு தூரம் துராக்ருதம் செய்கிறார்கள் என்பதை நேரில் கண்டவர்க்கே நெஞ்சு குமுறும். அந்தோ! அப்பெண் தொழிலாளர் நிலையை எழுத முடியுமோ? பேச முடியுமோ?

தொழிற்சாலைக்குள் மாத்திரம் பெண் தொழிலாளர்க்கு வசதி அளிப்பது போதாது. வெளியேயும் அவர்களுக்குப் பாதுகாப்பு வேண்டும். ஒரு பெண் தொழிலாளி வெளியே யிருக்கையில் மேஸ்திரியின் ஏவலால் ஆண் தொழிலாளர் குடித்துவிட்டு வெறிபிடித்து அப் பெண் தொழிலாளியைத் துராக்ருதம் செய்கிறார். இதைத் தடுக்க வழியில்லையா? உண்டு. நல்லவீடு வசதி யளித்துக் காப்பதே யாகும்.

பெண் தொழிலாளர் சம்பந்தப்பட்ட வரையில் அவர்களுக்கு மிகவும் குறைந்த கூலியே அளிக்கப்படுகிறது. அவர்களது கூலியை உயர்த்தினால் நன்றாயிருக்கும்.

பெண் தொழிலாளர்க்கு வீடு அளிப்பதுடன் சமூகத்தில் அவர்களுக்கு நல்ல பாதுகாப்பு அளிக்கவேண்டுவதும் அவசியமாகிறது. அவர்களுக்கு அறிவு வளர்ச்சிக்கான போதனை மிகவும் முக்கியம்.

—"டைம்ஸ் ஆப் இந்தியா"



எடுத்தல் - உண்டாக்குதல்; எழுப்புதல்; ஆக்கஞ் செய்தல்.

அளபெடைகளின் ஒலி, உறுதிப்பாட்டை உணர்த்துவது.

மேற்போந்த பாக்கள் வகை. இப்பாடல் தொகை. மழை பெய்வதால் இன்னின்ன நலன் விளையும் என்பதும், மழை பெய்யாவிடின் இன்னின்ன கேடு விளையும் என்பதும் வகை முறையில் மேற்பாக்களில் சொல்லப் பட்டன. அவைகளைத் தொகைப்படுத்திச் சொல்வது இப்பாடல்.

கெடுதல் இன்னதென உணர்ந்தார்க்கே நலத்தின் தன்மை பெரிதும் விளங்குமாதலின் கெடுத்தலை முன்னரும், எடுத்தலைப் பின்னரும் அமைத்தனர் போலும். மேற்பாக்களில் எதிர்மறைக் குறிப்புகள் பலவும், உடன்பாட்டுக் குறிப்புகள் சிலவும் பொறிக்கப்பட்டிருத்தலால் கெடுத்தல்முன்னும், எடுத்தல் பின்னும் முறையே அமைக்கப்பட்டன என்றுங் கூறலாம்.

மழை கெடுக்கும்; எடுக்கும். இரண்டையுஞ் செய்ய வல்லது மழை. இதனால் மழையினதாற்றல் விளங்குதல் காண்க.

## மனிதன் நாயாகிறான்!

தெருவெல்லாம் குலைக்கிறான்

இரவு நாம் தூங்குகிறோம். தெருவில் நாய்கள் குலைக்கின்றன. அந்தச் சப்தம் கேட்டு விழித்துக் கொள்கிறோம். அந்நாயை வெட்டிப் போடலாமா வென்று தோன்றுகிறது. அந்தமாதிரி ஒரு மனிதனுக்குத் தோன்றியது. அவன் ஸ்டாக்ஹல்ம் வாசி; நாய்கள் குலைக்கும் சப்தத்தைத் தடுக்க ஒரு சட்டம் கொண்டுவந்தான். அது நிறைவேற்றப்பட்டது. இப்பொழுது இரவு தெருவில் அவனே நாய் போல் குலைத்துக்கொண்டு போகிறான். அவன் குலைக்கும் சப்தத்தைக் கேட்டு எந்த நாயாவது குலைத்தால் அந்த நாயின் சொந்தக்காரன் அபராதம் விதிக்கப்படுவான்! சட்டம் எப்படி? நாய் குலைப்பதைவிட மனிதன் குலைப்பதே தலைவேதனையா யிருக்கும்!

தோழர் சமன்லால் எழுதிய 'மறைந்து வரும் ஏகாதிபத்தியம்' என்னும் புத்தகம் இந்தியா அரசாங்கத்தாரால் தடுக்கப்பட்டுள்ளது.

o o o

தோழர் பாட்லிவாலாவைக் கைது செய்தமை பற்றிக் கண்டித்து வங்காளம், பம்பாய், ஆந்திரா, மலையாளம் முதலிய மாகாணங்களில் பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன. கண்டனத் தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன. சென்னை அரசாங்கம் கவனிக்குமா?

o o o

தேவஸ்தான பரிபாலன போர்டுக்குச் சம்பந்தப்பட்ட கோயில்களிலுள்ள தென்னை மரங்களில் கள்ளிறக்க அனுமதிக்கக்கூடாது என உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. மிராசுதார்களும் பிறரும் இதைப் பின்பற்றுவார்களாக.

## காங்கரஸுக்கு எதிர்ப் பிரசாரம்

இந்திய அரசாங்கம்செய்யுமாம்!

ரேடியோ அபிவிருத்தி மர்மம் என்ன!

இந்திய அரசாங்கம் ரேடியோ நிலையங்கள் பல புதிதாக அமைக்கப்போகிறது. அவை காங்கரஸுக்கு விரோதமான பிரசாரம் செய்ய உபயோகித்துக் கொள்ளப்படுமா? நிச்சயமாக அவை அப்பிரசாரத்துக்கே உபயோகித்துக் கொள்ளப்படுமென்று லண்டன் "நியூஸ் ரெவியூ" கூறுகிறது அது சொல்கிறது:—

"புது அரசியலில் கிடைக்கப்போகும் நன்மையை மக்களிடையே பிரசாரம் செய்யவும் .பிரிட்டனின் விரோதிகளான காங்கரஸ் காரர்களால் புது அரசியலுக்கு விரோதமாக நாட்டில் செய்யப்படும் பிரசாரத்தை முளையிலேயே கிள்ளி எறியவும் இந்திய அரசாங்கம் நாற்பது லக்ஷரூபாய் செலவில் ஒலி பரப்பு அபிவிருத்தி செய்ய நினைத்திருக்கிறது"

## பூனைகள் குத்துச் சண்டை

நியூயார்க் நகரில் களியாட்ட விடுதி ஒன்றிருக்கிறது. அங்கே இரு பூனைகள் வளர்க்கப்படுகின்றன. அவை குத்துச்சண்டை செய்கின்றன! அவை இரண்டும் கையில் தோலினால் செய்யப்பட்ட கையுறைகளை அணிந்து கொண்டு பெரிய 'சாம்பியன்' போலச் சண்டை போடுவதைப்பார்க்க வேடிக்கையாயிருக்கும். ஆர்தர் நெல்ஸன் என்பவர் அவைகளை இவ்வாறு பழக்கியிருக்கிறார்!

## இருபதுமைல்க்ஷவரம்

ஆயுட்காலத்தில் செய்துகொள்ளும் தூரம்

ஆங்கிலேயர் மூளை!

கேளுங்கள்! கேளுங்கள்! மிகவும் நுட்பமான ஆராய்ச்சி. "எவரிபடீஸ் வீக்லி"யில் ஒருவர் அபூர்வமான விஷயத்தை வெளியிட்டிருக்கிறார். "ஐயா! க்ஷவரம் செய்துகொள்வதை யார் முதலில் கண்டுபிடித்தார்? கி. மு. 300-ம் ஆண்டில் உரோமர் க்ஷவரம் செய்து கொண்டதாகவே தெரிகிறது! ஒருவன் தனது பதினெட்டாவது வயதில் க்ஷவரம் செய்ய ஆரம்பித்துக் கொள்வதாக வைத்துக் கொள்வோம். அவனது க்ஷவரக் கத்தி சுமார் மொத்தம் இருபது மைல் தூரம் க்ஷவரம் செய்திருக்கும்!" என்று அவர் எழுதுகிறார்! மூளையே!

பீகாரில் சேவாசமிதிச் சாரணசங்கம் நிறுவப்பெற்றுள்ளது. பாபுராஜேந்திர பிரசாதர் பிரதம சாரணராகவும், டாக்டர் சையதுமுகமது தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தேசீயச் சாரணர் வாழ்க.

o o o

கர்நாடிக் மில்லில் வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளருக்கு அநுதாபம் தெரிவித்துக்கொள்ள நேப்பியர் பார்க்கில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. நகரமெங்கும் அத்தகைய கூட்டங்கள் நடைபெறுவதாக. தொழிலாளரின் உரிமைகள் காக்கப்படுமென நம்புகிறோம்.

# ஆட்டு மந்தையில் பாதி கொடு!

## திருடப்போனவரிடம் நஷ்ட ஈடு

### மரத்தில் மோதிக் கொண்டவன் மதி!

### 'மரமிருப்பது உன் நிலந்தானே'

'கொடு நஷ்ட ஈடு!'

ஜூலியன் ஏ வெஸ்டன் என்பவர் பல நாடுகளில் சுற்றித்திரிந்தவர். அவர் அமெரிக்காவிலுள்ள சிவப்பு இந்தியரைப் பற்றி, ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதில் பின் வரும் விஷயம் காணப்படுகிறது:—

திருடப்போன விடத்தில் நஷ்டஈடு!

இந்தியன் ஒருவன் திருட விரும்பினன். ஒருநாள் இரவு அவன் மற்றொருவனின் பயிர்த்தோட்டத்துக்குள் புகுந்தான். அந்தத் தோட்டத்திலிருந்து காய்கறி தானியம் முதலியவற்றை அவன் திருட எண்ணினன். ஆனல் துரதிர்ஷ்டவசமாக அவன் முள்வேலிக்குள் மாட்டிக்கொண்டான். அதிலிருந்து தப்ப அவன் முயன்றான். முள்வேலியானதால் உடம்பெல்லாம் கிழித்து ரத்தக்காயம் தோன்றிவிட்டது. முடிவில் அம்மனிதன் தப்பிவிட்டான். மறுநாள் தோட்டத்துச் சொந்தக்காரன்மீது வழக்குத் தொடர்ந்தான்; தன்மீது காயம் ஏற்படத் தோட்டக்காரனே ஜவாப்தாரி என்றும், அதற்கு நஷ்ட ஈடு அளிக்க வேண்டுமென்றும் வாதாடினன். திருட நினைத்ததுபற்றிக் கேள்வியில்லை. நஷ்ட ஈடும் அளிக்கப்பட்டதாம்.

ஆட்டு மந்தையில் பாதி கொடு!

ஒருநாள் ஒரு சிவப்பு இந்தியன் ஒரு வயல் வழியாக உல்லாசமாகக் குதிரை சவாரி செய்துகொண் டிருந்தான். அப்பொழுது அவன் தலை 'தடா' லென்று ஒரு மரக்கிளை மீது மோதிற்று. அவன் மயக்கமாக வீழ்ந்து விட்டான்; சிறிது நேரம் கழித்து எழுந்தான்; அந்த வயலுக்குச் சொந்தக்காரன்மீது வழக்குத் தொடர்ந்தான். அது ஒரு மேய்ச்சல் நிலம். அதற்குச் சொந்தக்காரன் தன் ஆடுமாடுகளை அதில் மேய்ப்பது வழக்கம். அந்த நிலத்தில் இருந்த மரம் தனக்கு விபத்து விளைவித்தமையால் அந்த ஆட்டு மந்தையில் பாதி கொடுக்க வேண்டு மென்று அந்தச் சிவப்பு இந்தியன் வழக்குத் தொடர்ந்தான். மரத்தின்மீது அவன் மோதிக்கொண்டால் அதற்கு நிலத்துச் சொந்தக்காரனு பொறுப்பாளி! ஆட்டுமந்தையில் பாதி எதற்காகக் கொடுப்பது? அவை யெல்லாம் வேறு விஷயம். அவன்கேட்டபடி ஆட்டுமந்தையில்பாதி அளிக்கத் தீர்ப்புச் சொல்லப்பட்டது!

நஷ்டஈடு கொடு!

ஒரு பள்ளிக்கூடம். அதில் தங்கள் பெண்ணுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்குமாறும், வீட்டு வேலைகள் கற்பிக்குமாறும் வேண்டிப் பெற்றோர் தம் பெண்ணை அனுப்பினர். ஒரு நாள் அந்தப் பெண் ஒரு குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு ஜலம் கொண்டு வந்தாள்.

குடம் நழுவிக் காலில் வீழ்ந்தது. அதனல் கால் ஊனமாயிற்று. இச் சமாசாரம் பெற்றோருக்குத் தெரியவே அவர்கள் பள்ளிக்கூட அதிகாரிகள் மீது பெருத்த நஷ்டஈட்டு வழக்குத் தொடர்ந்தார்கள்! "பள்ளிக்கூட அதிகாரிகளின் குடமும், அதிலுள்ள ஜலமும்தானே எங்கள் பெண்ணின் காலை ஒடித்தன! கொடு! நஷ்டஈடு" என்று அவர்கள் கேட்டார்கள்!

உலகத்தில் கோடீஸ்வரராக விளங்கி காலஞ் சென்ற ராக்பெல்லர் ஆங்கிலக் கலாசாலைகளுக்காக 16,00,000 பவுன் நன்கொடையளித்துள்ளனராம். இவர் போன்று அள்ளிக் கொடுக்கும் வள்ளல்களின்மையாலல்லவோ நம்நாட்டுக் கலைகள் மங்கி வந்தன.



மாதர் பகுதி

# ஜெர்மன் பெண்கள் பயிற்சி

## குடியேற்ற நாட்டுப் பள்ளிக்கூடம்

### சமையல் வேலையில் பழக்குதல்

வீட்டிலேயே தோட்டங்கள்

யூஜெனிவான் கவர்ன்ஸ் என்பவர் சில நண்பருடன் ஜெர்மெனியிலுள்ள ரெண்ட்ஸ்பர்க் நகரத்துக் குடியேற்ற நாட்டுப் பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்டார். அங்குக் குடியேற்ற நாட்டு வாழ்க்கைக்குத் தகுதியாதற் பொருட்டுப் பெண்கள் பழக்கப் படுகிறார்கள். அவர் நேரிற் கண்டதை, இக்கட்டுரையில் கூறியுள்ளார்.

ரேண்ட்ஸ்பர்க் பாலம்

நாங்கள் ரெண்ட் ஸ்பர்க் நகரத்தை நோக்கிச் சென்றோம். அந் நகரத்தின் வெளிப் புறத்தே ஒரு சிற்றாறு ஓடுகிறது. அவ்வாற்றில் பெரிய படகுகள் செல்லுதல் கூடும். அதனல் வேண்டிய போது நீக்கப்படும் வாராவதி ஒன்றின் மூலமாகவே அந்நகரத்தை யடைதல் வேண்டும். நாங்கள் சென்றபோது அவ்வாற்றில் ஒரு படகு வந்துகொண்டிருந்தது. வாராவதி தூக்கப்பட்டிருந்தது. எங்களுக்கு வழியில்லை. சிறிது நேரம் அங்குத் தங்கினேம். அப்போது வாராவதியின் காப்பாளனை நோக்கிரெண்ட்ஸ்பர்க் நகரத்தில் பாக்கக் கூடிய சிறந்த இடங்கள்யாவை என்று விசாரித்தோம். அவன் ஆற்றின் அக்கரையிலுள்ள குடியேற்ற நாட்டுப் பள்ளிக்கூடத்தைப் பற்றிப் பிரமாதமாகக் கூறினன். எங்களுக்கும் ஆச்சரியம் அதிகம் உண்டாயிற்று. வாராவதி இணைக்கப்பட்டதும் ஆற்றைக் கடந்தோம். நாங்கள் பார்த்த படகும் குடியேற்ற நாட்டுப் பள்ளிக்கூடத்துக்கு அருகில் நின்றது.

அப்படகில் குடியேற்ற நாட்டுச் சம்பந்தமான சில பொருள்கள் காணப்பட்டன. எனவே பள்ளிக்கூடத்திலிருந்த எல்லாரும் வெகு சந்தோஷமடைந்தனர். இப்பள்ளிக்கூடத்தில் தங்கியிருப்போர் பெரும்பாலும் பெண்களே. ஆண் மக்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. அவர் அனைவரும் ஒற்றுமையாக ஒருவித சங்கடமுமில்லாமல் வாழ்ந்தமையே எங்கள் மனத்தைக் கவர்ந்தது.

பள்ளிக்கூடம்

பெண்கள் வெளிநாடுகளில் வாழ்தற்குத் தகுந்தவர்களாக இங்குப் பழக்கப்படுகிறார்கள். இப்பள்ளிக்கூடத்தில் பல கட்டடங்கள் இருக்கின்றன. ஒவ்வொருபகுதியினருக்கும்பிரித்துத்தரப்பட்டிருக்கிறது. அக்கட்டடத்தைச் சுத்தமாகவும் ஒழுங்காகவும் வைத்துக் கொள்ள வேண்டுவது அப்பகுதியினரது கடமை. அவர் தம் முகத்தில் எப்போதும் புன்னகையே தாண்டவம் புரிகிறது. சுயநலத்தை அவர்கள் அதிகமாகக் கவனிப்பதேயில்லை. தேசநலனே அவர்முன் தோன்றுகிறது. அந்நலனுக்காக அவர்கள் தங்கள் உயிரையும் தியாகம் செய்யச் சித்தமாகவிருக்கிறார்கள்.

அப்பள்ளிக்கூடத்திலுள்ள பெரிய உபாத்தியாயினி முதல் கீழ் வகுப்பு மாணவி வரையில் எல்லாரும் ஒற்றுமையுடன் வாழ்கிறார்; எல்லாரும் ஓரே குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று எண்ணுகிறார்.

அக்குடியேற்றநாட்டுப் பள்ளிக்கூடத்தில் அடுப்பங்கரை வேலைகளெல்லாம் பெண்களாலேயே கவனிக்கப்படுகின்றன. வெளிநாடுகளில் சீதோஷ்ணமும், காய் கறிவகைகளும், உணவுப் பொருள்களும் மாறுபட்டனவே. எனவே அதற்குத் தகுந்தவாறு சமையல் செய்யப் பெண்கள் பழக்கப்படுகிறார்கள்; சமையலறைகளில் மிகவும் சுறு சுறுப்பாகவிருக்கிறார்கள்.

சமையல் வேலை

அப்பள்ளிக்கூடத்தில் பெண்கள் சமையலோடு நிற்கவில்லை; காய்கறிகளையும் பயிரிடுகிறார்கள். வெளிநாடுகளில் காய் கறிகள் கிடைப்பது அரிதென்று முன்னரே கூறினேமல்லவா? அந்நாடுகளின் சொந்த வீடுகளிலேயே காய்கறிகள் பயிரிட்டுக் கொள்ளுதல் வேண்டும். அதற்காகவே பெண்கள் அப்பள்ளிக் கூடத்தில் தோட்டவேலையில் பழக்கப்படுகிறார்கள்.

பள்ளிக்கூடத்தை விட்டதும் அம் மாணவர் வெளிநாடுகளில் வாழ்தற்கு லாயக்கானவர்களாகக் கருதப்படுவதில்லை. இரண்டு வருஷம் ஜெர்மெனியிலேயே பழகுதல் வேண்டும். அல்லது வெளிநாடுகளிலுள்ள பழகிய ஜெர்மானியருடன் பழகுதல் வேண்டும் அதன் பின்னரே அவர்கள் தனிமையாக வாழும் உரிமையைப் பெறுகிறார்கள்.

அப்பள்ளிக்கூடத்தை உயிருள்ள பள்ளிக்கூடம் என்று சொல்லுதல் வேண்டும். அங்கு ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் வழங்கப்பட் டிருக்கிறது. அச்சுதந்திரத்தை அவர்கள் சரியானபடி உபயோகித்தல்வேண்டும். சரியானபடி உபயோகியாதவர்கள் வீட்டுக்கு அனுப்பப்படுகிறார்கள். பள்ளிக்கூடத்திலேயே ஒழுங்காக நின்றவர்கள் பேரும், புகழும் பெறுகிறார்கள்.

—"பாம்பே க்ரானிகல்"

# அலட்சியம் வேண்டாம்

## இளைஞர்களதே எதிர்காலம்

### சீனத் தலைவரின் சீரிய உரை

தேசப் பணியே தெய்வப் பணி

சீனத் தலைவர் ஜெனரல் சியாங்கே-ஷேக் சீன மாணவர்க்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். அது "திபீப்பிள்ஸ் ட்ரிப்யூன்" என்ற பத்திரிகையில் வெளியா யிருக்கிறது. இந்திய மாணவர்க்கும் அது பயன் தரும். அதன் சாரம் வருமாறு:—

பாமர மக்களை நடாத்திச் செல்வது இளைஞர்களது மகத்தான பொறுப்பாகும். அதுவும் மாணவர்களாகவுள்ள இளைஞர்க்கே அந்தப் பொறுப்பு ஜாஸ்தியாகும். அப்பொறுப்பை எந்த இளைஞனும் தட்டிக் கழித்தல்ஆகாது. "வாழ்க்கையின் லக்ஷியம் சேவை செய்வதே" என்று டாக்டர் ஸன்யாட்ஸென் கூறியிருக்கிறார். பள்ளிக்கூடத்தில் படிக்கும் பொழுதே இளைஞர்கள் சமூகத்தின் நன்மைகளைப் பெறுகிறார்கள். எதிர்காலத்துக்குத் தக்கபடி அவர்கள் தங்களைப் பண்படுத்திக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் சமூகத்தில் அட்டைகள்போலக் கருதப்படுவார்கள்.

ஆகவே சீனத்து மாணவர்கள் இப்பொழுது என்னசெய்ய வேண்டும்? வாழ்வில் சரியான விஷயங்கள் எவை என்பதை அறிந்துகொள்ள வேண்டும். சமூகத்திலுள்ள கெடுதல்களையும் அவற்றால் ஏற்படும் தீமைகளையும் இரண்டாவதாக அவர்கள் அறிதல் வேண்டும். மூன்றாவதாக அவர்கள் தங்கள் ஓய்வு நேரத்தைச் சமூகச் சீர்திருத்தத்திலும், கிராமப் புனருத்தாரணத்திலும் செலவிடுதல் வேண்டும்.

இளைஞர்கள் படித்துக்கொண்டே தேச சேவையில் ஈடுபட முடியாதென்று எண்ணுவது முட்டாள் தனம். ஒவ்வொருவரும் தம் தம் கடமையைச் செய்தாலேயே தேசம் கதிமோக்ஷமடையும். ஒவ்வொருவரும் தேச சேவையில் ஈடுபட்டால் தேசம்விடுதலை பெறும்.



# இதாலி சூழ்ச்சியால் பெரிய நெருக்கடி

## தாகூரின் அநுதாபம்

## மற்ற நாடுகளின்மீது ஜப்பான் சீற்றம்

### இங்கிலாந்தில் வின்ஸர் இயக்கம்

—[o]—

### பிரிட்டிஷ் கப்பல்கள் தாக்கப்பட்டன

மத்தியதரைக்கடல் பாதுகாப்பில் இதாலிக்குப் பாகம் தரப்பட்டது. இதனல் இதாலி இணங்கி வருமெனச் சிலர் எண்ணினர். அதற்கு மாறாக இதாலி வேறு சூழ்ச்சிகளைச் செய்ய ஆரம்பித்து விட்டது. இதைக்கண்டு பிரான்ஸ் சீறுகிறது; பிரிட்டன் நடுங்குகிறது; ஸ்பெயின் சந்தோஷிக்கிறது. ஒன்பது நாடுகளின் கூட்டத்தில் கலந்து கொள்ள ஜப்பான் மறுத்துவிட்டது. அதனல் சீன - ஜப்பான் யுத்தம் பலமாகிறது. ஜப்பான் விஷக்காற்றை உபயோகிக்கிறது. இதைத் தாகூர் கண்டிக்கிறார்.

சீனத்தில் ஜெர்மேன் தளபதிகள்

இப்போது நடந்துவரும் சீன - ஜப்பான் யுத்தத்தில் சீனருக்கு ஜெர்மன் உதவி இருந்து வருகிறதாம். பல வருஷங்களாக ஜெர்மானியத் தலைவர்களே சீனப் படைகளைப் பழக்கி வந்தார்கள். யுத்தம் நடக்கும்போதும் அவர் நாட்டைவிட்டுப் போய்விடவில்லை. ஷாங்கே நகரத்தில் மட்டும் ஐந்து தளபதிகள் இருக்கிறார்களாம். அவர்களில் முதன்மையானவர் பெயர் அலெக்ஸாண்டர் வான்பால்கன்ஹாஸன். சென்றஜேரோப்பிய யுத்தத்தில் எவ்வாறு தோல்விகள் கிடைத்தன; அவற்றை எவ்வாறு போக்கிக் கொள்ளுதல் கூடும் என்பவைகளை யோசனை செய்தே இப்போது இத்தலைவர்கள் யுத்தம் செய்கிறார்களாம்.

தொழிலாளர் போர்

'பாஸிஸம்' என்பது என்ன? பணக்காரர் இயக்கம் என்று பொருள். பணக்காரர் ஆதிக்கம் பெற்ற நாடுகளில் தொழிலாளர் நசுக்கப்படுவது இயற்கையே. தற்போது உலகத்தில் 'பாஸிஸ'த்துக்கு இரையானநாடுகள் மூன்று. அவை ஜெர்மெனி, இதாலி, ஜப்பான். அம்மூன்று நாடுகளிலும் தொழிலாளர் குறைகளைக் கேட்பார் இலர். எனவே அந்நாடுகளில் தொழிலாளர்கள் கிளர்ச்சிசெய்யஆரம்பித்துவிட்டார்கள். ஜப்பானில்மட்டும் பல இடங்களில் வேலை நிறுத்தம் ஆரம்பிக்கப்பட்டுவிட்டதாம். யோகஹாமா என்ற துறைமுகத்தில் சமதர்மத் தொழிலாளர் சிலர் யுத்த ஆயுதங்களை ஏற்றிக்கொண்டு சீனத்துக்குச் செல்லும் கப்பலொன்றைத் தடுத்தனர். அதனல் 'பாஸிஸ' அரசாங்கம் அத்தொழிலாளரைத் துப்பாக்கியால் சுட்டு வெளிப்படுத்தமுயன்றது.

ஒஸாகா என்றவிடத்தில் வேலைநிறுத்தங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. கோபி என்ற நகரில் தொழிலாளரின் பெண்கள் அரசாங்கத்தின் தவறைக் காண்பித்தற்பொருட்டு ஊர்வலமாக வந்தார்களாம்.

அரசாங்கத்தை ஆட்டுபவர் யார்?

ஜப்பான் 'பாஸிஸ' நாடு என்பதை முன்னமேயே கூறினேம். அவ்வரசாங்கத்திலுள்ள எல்லாரையும் பொம்மை போன்று ஆட்டி வைப்பன இரு பணக்கார ஜப்பானியக் குடும்பங்களே. அக்குடும்பங்களுக்கு முறையே மிட்ஸூயி, மிட்சுபிஷிஸ் என்று பெயர். ஜப்பானில் நடக்கும் ஆட்டுமயிர் வியாபாரத்தில் நூற்றுக்கு எண்பத்தைந்து பங்கை மிட்ஸூயி குடும்பமே நடத்துகிறதாம். அமெரிக்காவிலிருந்துவரும் பருத்தியில் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கை இக்குடும்பமே எடுத்துக் கொள்கிறது. மிட்ஸூயிகுடும்பத்தார்'லிபெரல்பார்ட்டி' என்ற கட்சியை ஸ்தாபித்து அதை இயக்கிவருகிறார். மிட்சுபிஷிஸ் குடும்பத்தார் அரசாங்கத்தின் வரவு செலவுக் கணக்கில் மிகவும் சிரத்தையுள்ளவராக விருக்கிறார். இவ்விருகுடும்பங்கள் ஒற்றுமைப்பட்டே நாட்டு விஷயங்களை நடத்திவருகின்றன.

ஜப்பான் செய்கை அக்கிரமமே

சீன - ஜப்பான் விஷயத்தைக் கவனிக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அக்கமிட்டி ஜப்பானின் செய்கைகளைத் துருவி ஆராய்ந்தது. இறுதியில் சீனத்தின்மீது படையெடுத்திருக்கும் ஜப்பான் செய்கை அக்கிரமமாகும் என்று தீர்மானித்துளது! தீர்மானத்தை மட்டும் நிறைவேற்றி விட்டால் போதுமா? அமெரிக்கத் தலைவரான ரூஸ்வெல்டும் சீனத்துக்குச் சாதகமாகவே பேசுகிறார். உலகத்திலுள்ள குடியாட்சி நாடுகளெல்லாம் ஒன்று சேர்ந்து சர்வாதிகாரிகளின் கொட்டங்களை அடக்கி உலக அமைதியை நிலைநாட்டவேண்டுமென்று அவர் கூறுகிறார். சர்வதேச சங்கக் கமிட்டி வேறொரு யோசனையையும் கூறியுள்ளது; ஒன்பது நாடுகளின் கூட்டத்தை விரைவில் கூட்டவேண்டுமென்றும், அக்கூட்டத்தின் மூலமாகப் போதிய உதவிகளைச் சீனத்துக்கு வழங்குதல் வேண்டுமென்றும் கூறுகிறது. இவ்வித முயற்சியில் சீனத்துக்குப் பாதகமாக எதுவும் செய்தல்கூடாதென்பது சங்கத்தின் வேண்டுகோள்.

வேண்டுவது பணமே

ரங்கூனிலுள்ள சீன அஸோஸியேஷன் ஒன்றுக்குச் சீனத்தின் முக்கிய தளபதியான சியாங்கேஷேக்கின் மனைவியார் ஒருகடிதம் எழுதியுள்ளார். அக்கடிதத்தில் தற்போது சீனத்துக்குப் பணம் வேண்டுமென்றும், அப்பணத்துக்காக வெளிநாட்டிலுள்ள சீன மக்கள் தங்களால் இயன்றவரையில் பாடுபடுதல் வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளன.

ஜப்பான் பகிஷ்காரம்

எல்லாநாடுகளிலும் ஜப்பான்சாமான்களைப் பகிஷ்கரித்தல் வேண்டுமென்ற கிளர்ச்சி தோன்றிவிட்டது. பிரிட்டன், பிரான்ஸ் முதலிய இருநாடுகளிலும் ஜப்பான் சாமான்கள் பகிஷ்கரிக்கப்படுகின்றன. கல்கத்தாவில் வங்காள மாகாணக் காங்கரஸ்கமிட்டி ஜப்பான்சாமான்களைப் பகிஷ்கரிக்கப் பிரசாரம் செய்யும் பொருட்டு ஒரு சப்கமிட்டியையும் நியமித்து விட்டது.

ஜப்பானியர் வெற்றி

இரண்டு வருஷங்களுக்கு முன் எதியோபியா மீது படையெடுத்தபோது நிர்ப்பந்த முறைகள் விதிக்கப்பட்டும் இதாலி எப்படித் தன்னைத்தானே பாதுகாத்துக் கொண்டதோ அப்படியே இப்போது ஜப்பான் தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ளுதல் கூடுமென்ற உறுதியில் நம்பிக்கை கொண்டிருக்கிறது. அதனல் மற்ற நாடுகள் என்ன கூறினும் அதை ஜப்பான் லட்சியம் செய்வதில்லை. சீனத்தின் வடபாகத்தில்மட்டும் ஜப்பானுக்கு வெற்றிகள் கிடைத்து வருகின்றன. ஷான்ஸி பிரதேசங்களில் கடுமையான யுத்தங்கள் நடைபெறுகின்றன. ஷாங்கே நகரத்தில் மட்டும் ஜப்பானியர் எதிர்பார்த்த வண்ணம் முன்னேற முடியவில்லை. அங்குள்ள சீனப் படைகள் பலமாக போர் புரிகின்றன. ஜப்பானியப் படைகள் விஷக் காற்றையும் உபயோகிக்க ஆரம்பித்து விட்டன. வட்சீனத்தில் ஒப்பி என்ற ஒரு நதி இருக்கிறது. அந் நதிக்கு வடபுறத்திலேயே இப்போது யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது. ஜப்பானியர் அந்நதியைக்கடவா வண்ணம் சீனர் பாதுகாப்புடன் இருக்கின்றனர். அந் நதியைக் கடந்து விட்டால் ஜப்பான் படைகள் வெகு சுலபமாக இருந்தாறுமல் தெற்கு நோக்கி முன்னேறுதல் கூடுமாம்.

ஜப்பான் பயமுறுத்துதல்

சர்வதேசசங்கக் கமிட்டி தீர்மானித்தபடி ஒன்பது நாடுகளின் கூட்டத்துக்குச் சுற்றறிக்கை அனுப்பப்பட்டது. ஜப்பான் அக்கூட்டத்துக்குவர மறுத்துவிட்டது. அதோடு ஜப்பான் சாமான்களைப் பகிஷ்கரிக்கும் மற்ற நாடுகளைக் கண்டும் ஜப்பான் சீறுகிறது. உதாரணமாகக் கல்கத்தாவிலிருக்கும் ஜப்பான் பிரதிநிதியின் கூற்றை எடுத்துக் கொள்வோம். இந்தியா ஜப்பான் சாமான்களைப் பகிஷ்கரிப்பதைக் கண்டு அவர் கோபிக்கிறார். இந்தியாவுக்கும் ஜப்பானுக்கும் வெகுகாலமாக நட்பு இருந்து வந்ததாம். அவ்வித நட்பை இப்போது ஏன் கலைத்துக் கொள்கிறீர்கள் என்று அவர் கேட்கிறார். ஜப்பான் சாமான் வியாபாரிகளெல்லாம் பாரபக்ஷமின்றி நடு நிலைமை வகிக்கிறார்களாம். அதுபோலவே மற்ற இந்தியரும் நடு நிலைமை வகித்தல் வேண்டுமாம். இல்லாவிடின் இந்தியாவிலிருந்து ஜப்பானுக்கு ஏற்றுமதியாகும் பொருள்களை ஜப்பான் நிறுத்திவிடுமாம். இப்பிரதிநிதியும் ஜப்பானுக்கு அழைக்கப்பட்டார்.

தாகூரின் அநுதாபம்

ஜப்பானிலிருந்து ராஷ்பிஹாரிபோஸ் என்பார் தாகூருக்கு ஒரு லிகிதம் அனுப்பியுள்ளார். அதில் இந்தியாவில் நடைபெறும் ஜப்பானுக்கு விரோதமான கிளர்ச்சியைத் தடுக்க வேண்டுமென்று குறிக்கப்பட்டுள்ளது. இக்கடிதம் கவிஞர் பெருமானின் கோபத்தைக் கிளப்பி விட்டது. அவர் ஜப்பானின் அக்கிரமங்களைக் கூறுகிறார். அது வருமாறு:

"ஜப்பானின் முன்னேற்றத்தைக் கண்டு ஆசியா கண்டத்து மக்களே சந்தோஷப்பட்டார்கள். கீழ்நாட்டின் கலைகளையும், நாகரிகத்தையும், மேற்கு நாட்டுடன் எதிர்த்துப் போராடிக் காப்பாற்றுதற்கு ஜப்பானுவது முன் வந்ததே யென்று அவர்கள் மகிழ்ந்தார்கள். அந்த நல்லெண்ணத்தை ஜப்பான் மாற்றிவிட்டது.

"இதுவரையில் உலகத்தில் ஒரு நாடு மற்றொரு நாட்டைக் கைப்பற்ற வில்லையா? ஆனல் இதுபோன்ற அக்கிரமங்கள் நடந்ததுண்டா? ஆயுத மற்ற நிரபராதியான மக்கள் விஷமூட்டி கொல்லப்படுகிறார்களே!"

இதாலியின் சூழ்ச்சி

மத்தியதரைக் கடல் பாதுகாப்பில் இதாலிக்கு இடங்கொடுத்து விடுவதாலும், ஆங்கிலோ - பிரெஞ்சு மகாநாட்டில் இதாலியைச் சேர்த்துக் கொள்வதாலும் இதாலியைச் சரிப்படுத்திவிடலாமென்று பிரிட்டனும் பிரான்சும் நினைத்தன. இதாலி இலேசில் இவர்களோடு ஒத்துவந்து விடுமா? பெரிய ஏமாற்றமொன்றை இதாலி உண்டாக்கி விட்டது. மூன்று நாடுகளின் கூட்டத்துக்குவர இதாலி மறுத்துவிட்டது. அதோடு ஸ்பெயினிலுள்ள தொண்டர்களைப் பற்றிய பேச்சை 'நடுநிலைக்' கமிட்டியில் தான் பேசிக் கொள்ளுதல் வேண்டுமாம். இதைக் கண்டு பிரான்ஸ் வீரம் பேசத் தொடங்கிவிட்டது. பிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் இடையில் 'பிரனிஸ்' என்றஒரு மலைத்தொடர் இருக்கிறது. இப்போது அம்மலைத்தொடர் மூலமாகத் தொண்டர் ஸ்பெயினில் புகாவண்ணம் பிரான்ஸ் பாதுகாத்து வருகிறது. இதாலி இணங்கி வாராவிடின் பிரான்ஸ் அப்பாதுகாப்பை நீக்கிவிடுமாம். அதனல் அந்நிய நாட்டுத் தொண்டர்கள் ஸ்பெயினில் பிரவேசிக்க முடியும். இது கண்டு ஸ்பெயின் அரசாங்கம் சந்தோஷப்படுகிறது.

ஜவஹரின் அபிப்பிராயம்

இதாலியின் சூழ்ச்சியில் ஏற்பட்டுள்ள உலக நெருக்கடியைப்பற்றி ஜவஹர் பின் வருமாறு கூறுகிறார்:—

"உலக நிலைமையை எண்ணிப்பார்க்கும்போது நெஞ்சம் நடுங்குகிறது. மனித சமூகமே ஒரு பாறையின் ஓரத்தில் நின்று கொண்டிருக்கிறது. தப்பித்தவறி நழுவினலோ பெரிய அபாயம் நேர்தல் நிச்சயம்."

பிரிட்டிஷ் கப்பல்கள் தாக்கப்பட்டன

வாலன்ஸியாவுக்கு அருகில் சென்று கொண்டிருந்த இரண்டு பிரிட்டிஷ் வியாபாரக்கப்பல்கள் ஸ்பெயின் கலகக்காரரால் தாக்கப்பட்டன. சில நாட்களுக்கு முன் வேறொரு கப்பல் ஒரு நீர்மூழ்கிக் கப்பலால் தாக்கப்பட்டது. அந்த நீர்மூழ்கிக் கப்பல் எந்த நாட்டைச் சேர்ந்ததென்பதை இன்னும் கூறமுடியவில்லை.

பாலஸ்தீனம்

பாலஸ்தீனத்தில் அமைதி நிலவுகிறது. எவ்வித பெரிய கலகங்களும் உண்டாகாதென்று எதிர்பார்க்கப் படுகிறது. ஆனல் பாலஸ்தீனத்தை மூன்று பிரிவுகளாகப் பிரித்தலே மிகுந்த அதிருப்தியை உண்டாக்கியிருக்கிறது. ஜெர்மெனியில் யூதர்கள் ஹிம்ஸிக்கப் படுகிறார்கள். அவர்களில் சிலர் பிரான்சுக்குச் செல்ல முற்பட்டனர். அவர்களையும் பிரெஞ்சு அரசாங்கம் தடுத்துவிட்டது.

ரூஸ்வெல்டுக்கு எதிர்ப்பு

உலக சமாதானம் பற்றி அமெரிக்கத் தலைவர் சில நாட்களுக்கு முன் செய்த பிரசங்கத்தைக் கண்டித்துச் சிலர் அமெரிக்காவில் பேசுகிறார். ஜஸ்டிஸ் யூகோ பிளாக் என்பவர் அமெரிக்காவின் உயர்தர நீதி மன்றத்தின் நீதிபதியாக நியமித்தது பற்றியும் எதிர்ப்புக்கள் பல இருந்து வருகின்றனவாம்.

வின்ஸர் உதவி இயக்கம்

வின்ஸர் கோமகனுரின் உரிமைகளைக் காப்பாற்ற இங்கிலாந்தில் ஓர் இயக்கம் தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. அதன் ஸ்தாபகர் திரு. ஜார்ஜ்விஷ் என்பவர். அவ்வியக்கத்தாருக்கு மாஜி எட்வர்ட் மன்னர் மீது அன்பு அதிகம். அவருடைய நலனுக்காக உழைக்கவே இயக்கத்தார் துணிந்து விட்டனர்.

என் கடன் பணிசெய்து கிடப்பதே

எவ்வுயிர்க்கும் அன்பாயிரு

நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1937௵ அக்டோபர்மீ 15உ

## காங்கரஸும் சமதர்மமும்

காங்கரஸுக்குள் எத்துணையோ கொள்கைகள் நுழைந்தன. அவை யாவும் திரண்டு இப்பொழுது காந்தியமாக உருக்கொண்டுள்ளன. காந்தியம் சர்வாதிகாரமாகப் பரிணமிக்குமா? சமதர்மமாகப் பரிணமிக்குமா? என்று ஆராயும் நிலைநேர்ந்திருக்கிறது.

ஏழு மாகாணங்களில் இப்பொழுது காங்கரஸ் ஆட்சி நடைபெறுகிறது. ஆங்காங்கே மந்திரி பதவி ஏற்றுள்ள சகோதரர்கள் நெஞ்சில் காந்தியம் படிந்திருக்குமென்பதில் ஐயமில்லை. காந்தியம் சில மந்திரிமாரிடத்தில் சர்வாதிகார ஒலியையும், சில மந்திரிமாரிடத்தில் சமதர்மவொலியையும் எழுப்பிக் கொண்டிருக்கிறது. இவ்விரண்டும் நாளுக்குநாள் வளர்ந்து காங்கரஸுக்குள் ஒருவிதப் போராட்டத்தை உண்டுபண்ணுதல்கூடும்.

இப்பொழுது உலகம் சர்வாதிகார - சமதர்மப் போராட்டத்துக்கு இரையாகி வருதல் கண்கூடு. அப்போராட்டப் புயல் இந்தியாவிலும் வீசாமற் போகாது. இந்தியாவின் இயற்கை சர்வாதிகாரத்துக்கு இடந்தாராது. இந்தியாவில் சர்வாதிகாரம் நீர்க்குமிழி போல் தோன்றி நின்றழியும்; சமதர்மமே ஆக்கம் பெறும். இந்தியக் கலைகளெல்லாம் சமதர்மத்தை அடிப்படையாகக் கொண்டே அமைந்துள்ளன. அத்தகைக் கலைகள் பிறந்த நாடு சர்வாதிகாரத்துக்கு எங்ஙனம் இடந்தரும்? வரும் ஆண்டில் கூடப்போகுங்காங்கரஸில் சர்வாதிகார - சமதர்ம வாதம் எழினும் எழும். வெற்றி சமதர்மத்துக்கு விளைந்தால் நாடு நலம் பெறும்.

காந்திய மலரில் கமழ்வது சமதர்ம மணமே யாகும். தற்போது 'சமதர்மம்' என்று சொல்லப்படுவது மேல் நாட்டு முறையைப் பற்றியது. அது காந்தியத்துக்கு மாறுபட்டது. காந்தியம் அறிவுறுத்தும் சமதர்மம் பழைய இந்திய தர்மத்தை - ஜீவகாருண்யத்தை - அடிப்படையாகக் கொண்டது. அதன்வழிச் சமதர்மம் வளர்வதே சிறப்பு.

இந்நாளில் சமதர்மச் சங்கங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன. அவைகள் காங்கரஸின் உறுப்புகளாகவே விளங்குகின்றன. அவைகளுக்குள் ஒருமைப்பாடு வேண்டும். சமதர்மிகளிடைத் தற்போது ஒருமைப்பாடு நிலவவில்லை. சமதர்மிகள் ஒருமைப்பாட்டை ஓம்ப முயலுதல் வேண்டும்.

சமதர்ம ஆக்கத்துக்குத் தொழிலாளரிடத்திலும், அவர்தந் தலைவரிடத்திலும் ஒருமைப்பாடு தேவை. இப்பொழுது தொழிலாளரிடைப் பலவிதக் கொள்கைகள் பிரசாரஞ் செய்யப்படுகின்றன. அப்பிரசாரம் தொழிலாளரை ஒன்ற ஒண்ணுதவாறு பிரிக்கிறது. தொழிலாளர் பிரிவு சமதர்ம முயற்சியைச் சாய்த்துவிடும். ஆகவே தொழிலாளர் தலைவர்கள் தங்களுக்குள் நேர்ந்துள்ள கருத்து வேற்றுமைகளைப் பொருட்படுத்தாது; மூலதத்துவத்தை மட்டும் தொழிலாளரிடைப்பிரசாரஞ் செய்வது நல்லது. அதனால் காங்கரஸைச் சமதர்ம வழியில் நடாத்துதற்கு வழி ஏற்படும்.

தொழிலாளரிடை நிலவும் பல திறக் கொள்கைகளைத் திரட்டி முக்கூறு படுத்தலாம். ஒன்று மிதவாதம்; மற்றொன்று பொதுவுடைமை; இன்னொன்று அபேதவாதம். இவைகளெல்லாம் சமதர்ம தத்துவத்தை முதலாகக் கொண்டனவே. அம்முதலைப் பொருளாக்கு முறைகளில் சில கருத்து வேற்றுமைகளிருக்கலாம். அவைகளைப் பாராட்டி முதலை அழித்துக் கொள்வது தவறு.

முன்னே அகில இந்தியத் தொழிற்சங்கம் ஒன்றே யிருந்தது. இப்பொழுது அஃது இரண்டாகப் பிரிந்து நிற்கிறது. அப்பிரிவு நாட்டுத் தொழிலாளர் இயக்கத்துக்கே இடர்விளைத்திருக்கிறது. அவ்விரண்டும் ஒன்றுபட்டால் தொழிற்சங்கங்களுக்குள் தோன்றியுள்ள பிளவுகள் ஒழியும். அவ்வொருமைப் பாட்டுக்குத் தலைவர்கள் உழைப்பார்களாக.

சமதர்மம் ஆத்திகத்தை விலக்குவது என்று பொதுவாகக் கருதப்படுகிறது. அக்கருத்து மக்களிடைப் பரவுதல் கூடாது. ஆத்திக நாத்திகத்துக்கும் சமதர்மத்துக்கும் தொடர்பில்லை என்பதைச் சமதர்ம தத்துவ முணர்ந்தோர் விளக்கிக் காட்டுதல்வேண்டும். பண்டை இந்தியச் சமதர்மிகள் கடவுளையும் கலைகளையும் மறந்து தொண்டாற்றினார்களில்லை; கடவுள் நெறி வாயிலாகக் கலைகளையும், கலைகள் வாயிலாகச் சமதர்மத்தையும் வளர்த்து வந்தார்கள். சமதர்ம இளைஞர்கள் மேல்நாட்டு நூல்களுடன், நம்நாட்டுக் கலைகளையும் பயில்வார்களானால் உண்மைவிளங்கப்பெறுவார்கள். நாட்டின் இயற்கைக்கேற்ற முறையில் சமதர்மப் பிரசாரஞ் செய்வது சிறப்பு. இரத்தப் புரட்சிப் பிரசாரமும், நாத்திகப் பிரசாரமும் நாட்டின் இயற்கைக்குப் பொருந்தியன அல்ல. அத்துறையில் சமதர்ம இளைஞர்கள் இறங்குதல்கூடாது. அத்துறையில் இறங்குவது சர்வாதிகாரத்துக்குத் துணை புரிவதாக முடியும்.

ஜவஹர்லால் நேருவும், எம். என். ராயும் ஒன்று பட்டுக் காந்தி யடிகளுடன் கலந்து, சில திங்களில் கூர்ஜரத்தில் கூடப்போகும் காங்கரஸை நாட்டின் இயற்கைக் கேற்ற முறையில்-சமதர்ம மார்க்கத்தில்-நடாத்த உளங்கொளல் வேண்டும். இல்லையேல் காங்கரஸ் ஆட்சி சர்வாதிகாரத்துக்கு இரையாகும்.

இந்தியா சர்வாதிகாரத்துக்கு இரையானால் உட்குழப்பங்கள் பெருகும். ஆதலால் காந்தியத்தின் வழிச் சமதர்மத்தை வளர்க்க முயல்வதே அறிவுடைமையாகும்.

## இலங்கையர்க்கு ஒரு விண்ணப்பம்

இலங்கையில் இந்தியர்க்கு விரோதமான மனப்பான்மை பெருகி வருகிறது. இலங்கையை விட்டு இந்தியரைத் துரத்தவும் முயற்சிகள் நடக்கின்றனவாம். இந்தியரின் தலைவிதியை என்னென்று சொல்வது?

காடாகக் கிடக்கும் பிரதேசங்களை யெல்லாம் உழைப்பினால் நாடாக்குபவர் இந்தியர். நாடு செழித்ததும் அங்குள்ளவர், நன்றியை மறக்கிறார்; இந்தியரை ஒடுக்க முற்படுகிறார். ஈதென்ன நியாயம்?

இந்தியர் இலங்கை சென்றார்; அங்கேயே வதிந்தார்; நாட்டைச் செழிக்கச் செய்தார். இப்பொழுது அங்கே புதிய மசோதா ஒன்று கொண்டு வரப்பட்டுளது. அது விரைவில் சட்டமாக்கப்படும். அம்மசோதாவில் இந்தியர்க்கு வாக்குரிமை அளிக்கப்படவில்லை. மற்ற சமூகத்தவர்க்கெல்லாம் வாக்குரிமை நல்கப்பட்டுளது.

இதை இந்திய அரசாங்கம் கண்டித்திருக்கிறது. மசோதா சட்டமாக்கப் பட்டதும் அதுபற்றி யோசிக்கலாமென்று இலங்கை அரசினர் இயம்புகின்றனர். இலங்கையர் நீதியை மறந்தனர் என்றே எண்ணுகிறோம். இலங்கைக்கும் இந்தியாவுக்கும் உள்ள தொடர்பு இன்று ஏற்பட்டதா? நேற்று ஏற்பட்டதா? ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இவ்விரு நாடுகளும் உறவு கொண்டே வாழ்கின்றன. பண்டைத் தமிழ் அரசர் காலங்களிலும் இலங்கை அரசினர் இந்தியாவுடன் நட்புரிமை பூண்டே வந்தனர். பண்டைச் சரித்திரங்களை இலங்கையர் சிந்திப்பாராக.

நீண்ட நாட்களாக இந்தியர் இலங்கையில் வதிகிறார்; அரசாங்கத்தால் விதிக்கப்படும் வரிகளை யெல்லாம் செலுத்துகிறார். வரி செலுத்தும் ஒரு கூட்டத்தாருக்கு வாக்குரிமை கொடாதது விந்தையினும் விந்தையே! ஐரோப்பியர்மட்டும் தேர்தலில் கலந்து கொள்ளலாமாம். அவர்க்கு வாக்குரிமை நல்கப் பட்டுளது. ஆனால் இந்தியர்க்கு வாக்குரிமை நல்கப் பட வில்லை. இஃதென்ன? துவேஷமா?

அந்தோ! இலங்கையில் சென்று உழைத்துக் காட்டை நாடாக்கிய இந்தியர் மீதா துவேஷம்? பாவம்! பாவம்! இலங்கை அரசாங்கம் அறவழிபற்றி நடப்பதாக. இந்திய அரசாங்கம் வாளா கிடவாது நேரிய முறையில் கடனாற்றுவதாக. இலங்கைச் சகோதரர்கள் இந்தியர் கூட்டுறவைப் பெற்று வாழுமாறு விண்ணப்பஞ் செய்து கொள்கிறோம்.

## இடியேறு

### ஜப்பானியப் பிரதிநிதியின் உறுமல்

ஜப்பானிலிருந்து கவியரசர் தாகூருக்கு ஒரு கடிதம் கிடைத்தது. அங்கேயுள்ள இந்தியர் இந்தியாவில் ஜப்பானுக்கு விரோதமான பிரசாரம் நடப்பது கண்டு அஞ்சுகின்றனராம். அவர் தமக்குக் கவியரசர் தக்க பதில் அளித்திருக்கிறார். கல்கத்தாவிலுள்ள ஜப்பானியப் பிரதிநிதி உறுமுகிறார். அவர், சீன - ஜப்பானியப் போரில் இந்தியா ஒரு பக்கமாயிருத்தல் கூடாதென்கிறார். ஜப்பானியச் சாமான்களை இந்தியா பகிஷ்கரித்தால் இந்தியப் பருத்தியை ஜப்பான் வாங்காதென்று பிரதிநிதி பயமுறுத்துகிறார். அதனால் இந்தியா பயந்துவிடாதென்பதை அவர் அறிவாராக. சத்தியத்தின் பொருட்டு உயிரையும் தியாகம் செய்யக்கூடிய உத்தமர் பிறந்த நாடு இந்தியா. இதை ஜப்பானியப் பிரதிநிதி உணர்வாராக. ஜப்பான் கொடுமை செய்கிறது; இரக்கமின்றி நடந்து வருகிறது; ஒரு பாவமு மறியாத சீனக் குழந்தைகளைக் கொல்கிறது; ஏழைகளை வதைக்கிறது; விஷக்காற்றை விடுகிறது. இவைகளைப் பார்த்துக் கொண்டு யார் வாளாவிருப்பர்? எந்த நாடு சகிக்கும்? சத்தியத்தையே நித்தியமாக எண்ணும் நாடு பொறுக்குமா? ஜப்பானின் செய்கை கொடிது! கொடிது! இந்தியா அதைக் கண்டித்தே தீரும். இந்தியப் பருத்தியை ஜப்பான் இறக்குமதி செய்யாவிடின் இந்தியா செத்தா போகும்? அப்பருத்தியை நூலாக்கி, ஆடையாக்க இந்தியாவில் மக்கள் இருக்கிறார்கள். ஜப்பானியப் பிரதிநிதி உறுமல் வேண்டாம்; சீனம் ஜப்பானால் வதைக்கப்படுவதை ஜப்பானியப் பிரதிநிதி தாங்கிப் பேசுவது அறமாகாது.

### திருவாங்கூரைப் பின்பற்றுக!

திருவாங்கூரில் சாரணர்படை திருத்தியமைக்கப் பட்டது. இப்பொழுது ஆண்டுள்ள சாரணர் சங்கம் ஒரு தனிப்பட்ட சுதந்திரத்தை யடைந்துவிட்டது. இளைஞர்களுக்குள் ஜாதி மத வேற்றுமை மனப்பான்மையைக் களைந்து, ஒற்றுமையை வளர்த்து, அவர்களைச் சமூகசேவை - தேசத் தொண்டு இவற்றில் ஆர்வமுடையவர்களாகச் செய்தலே அச்சங்கத்தின் நோக்கம். அதில் அந்நியம் அணுவுமில்லை. திருவாங்கூரின் அடையாளம்பொறிக்கப் பெற்ற ஒரு செங்கொடியையே சாரணர் தாங்குவர். 'கடமையைச் செய்' என்பதே அவர்தம் பிரதிக்ஞை. பிரிட்டிஷ் இந்தியா இதனைப் பின் பற்றுவதாக. பேடன் பவலின் சாரண இயக்கத்திற்காகப் பணம் சொரிந்தாகிவிட்டது. பவல் இந்தியரைப் பலமுறை இழித்து இழித்துக் கூறியுள்ளார். நிறத் திமிரும் ஆதிக்கமுமே அதற்குக்காரணம். பிரிட்டிஷ் இந்தியாவில் இன்று ஏழு மாகாணங்களில் காங்கரஸ் ஆட்சி நடைபெறுகிறது. சேவா சமிதி போன்ற தேசியச் சாரணரியக்கத்தைப் பலப்படுத்தவும், வளர்க்கவும் காங்கரஸ் மந்திரிமார் உதவி புரிவாராக. இளைஞர்கள் தேசியப் பற்றுடன் தொண்டு புரிய முற்படின் அவர்கள் சமூகத்தில் பல புரட்சிகளைக்கொண்டு வருதல் திண்ணம். சமூகமும் சீரிய முறைகளில் மாற்றியமைக்கப்படும். நாடும் முன்னேறும்.

### உறங்காதீர்!

ராஷ்டிரபதி பண்டித ஜவஹர்லால் நேரு டெல்லியில் ஒரு மாபெருங் கூட்டத்தில் பேசினார்; உலக அரசியல் வானத்தில் யுத்த மேகங்கள் மண்டுவதைப் பற்றிக் கூறினார்; உலகசக்திகள் போர் முனைக்கு வந்துவிட்டன என்றும் அறைந்தார். காங்கரஸைப் பற்றி அவர் கூறியதாவது:—

> காங்கரஸ்காரர் மந்திரி பதவி ஏற்றுக் கொண்டமையால் சுயராஜ்யம் வந்துவிட வில்லை. நாம் இன்னும் அந்நியர் ஆதிக்கத்தில் அடிமைகளாகவே வாழ்கிறோம். அதற்குச்சான்று பிரிட்டிஷ்சேனை இந்தியாவி லிருப்பதே யாகும். நாம் இப்போது ஒரு பனிவரைச் சிகரத்தின் விளிம்பில் நிற்கிறோம். எச்சரிக்கை!

ஜவஹரின் கூற்று உன்னற்பாலது. மந்திரி சபையமைந்தவுடன் 'எனது அரசாங்கம் - நமது அரசாங்கம்' என்னும் மொழிகள் பெருகிவிட்டன. பாமர மக்கள் நமது அரசாங்கம் நன்மை செய்யும் என மனப்பால் குடித்துக் கொண்டிருக்கிறார்கள். இத்தகைய உறங்கும் மனப்பான்மையை வளர்த்தல் பெருந் தீங்கு விளைவிப்பதாகும். புதிய அரசியல் சட்டத்தின் ஊழல்களை வெளிப்படுத்தி அதனைத் தகர்க்கவே காங்கரஸ் சட்டசபைக்குள் புகுந்தது. இது பற்றித் தீவிர பிரசாரம் செய்யப் பெறல் வேண்டும். அரசியற் கிளர்ச்சியில் ஈடுபடும் தீவிர இளைஞர்களுக்குப் பூரண ஆதரவையும் ஊக்கத்தையும் அளிக்கக் காங்கரஸ் முற்படல் வேண்டும். அதுவே ஜனநாயக முறை. மக்களை எக்காலத்திலும் 'உறங்காதீர்! உறங்காதீர்!' என்று தட்டியெழுப்பிக் கொண்டேயிருத்தல் வேண்டும். இளைஞர் எழுவாராக; மக்களிடையே அறப்புரட்சி மனப்பான்மையைஉண்டு பண்ணுவாராக.

### சீனத்துக்கு நிதி திரட்டுக

இந்தியா சம்பந்தப் பட்டவரை அது சீனத்துக்கு என்ன உபகாரம் செய்தல் இயலும்? நமது அநுதாபத்தைச் செயலில் காட்டுவதற்கு ஒரு சிறுவழியே எனக்குத் தோன்றுகிறது. சீனத்துக்காக இந்தியாவெங்கும் நிதி திரட்டுதல்வேண்டும். சீனத்தின் தேவைகள் அதிகம். கணக்கிலடங்காத காலந்தொட்டு நாம் சீனத்துடன் நட்புரிமைபூண்டு வந்திருக்கிறோம். இப்பொழுது நாம் செய்யும் உதவியைச் சீனம் பாராட்டும்.

ஸர். எச். பி. மோடி மேற்கண்டவாறு ஆ. பி. கிருபரிடம் தெரிவித்தார். அவரது யோசனை ஏற்கத்தக்கதே. சீனத் தலைவர் சியாங்கே ஷேக்கின் மனைவியார் இரங்கூனிலுள்ள சீனர் சங்கத்துக்குக் கடிதம் எழுதியுள்ளார்; சீனத்துக்குப் பொருளுதவி தேவையென்பதை அதில் குறிப்பிட்டுள்ளார். இச்சமயத்தில் நாம் நம்மால் இயன்றவரை முயன்று நிதிதிரட்டிச் சீனத்துக்கு உதவுதல் நலம்.

### தூங்கலாமா?

சென்னை நகர சபையின் நிர்வாக அறிக்கை வெளிவந்துள்ளது. நகரத்தை அபிவிருத்தி செய்யப் போதிய பணமில்லையென்று கமிஷனர் தெரிவிக்கிறார். அதற்காகக் கடன் வாங்கப்படுமாம். கடன் ஏற்றுக்கு? டிராம், பஸ், சினிமா முதலியவைகளை நகர சபைக்குச் சொந்தமாக்கி னாலென்ன? அது விஷயமாகக் கார்ப்பரேஷன் என்ன செய்கிறது? தூங்குகிறதா? மார்க்கட்டுகளில் சில நகரசபைக்குச் சொந்த மாக்கப் படுமாம். அது மட்டும் போதாது. டிராம், பஸ், சினிமா முதலியன நகரசபை உடைமையாதல் வேண்டும். சிற்றுண்டிச் சாலைகளை நகரசபையே நடத்தலாம். இவ்விதம் கார்ப்பரேஷன் செய்யும் எக்காரியத்தையும் அரசாங்கம் மறுது. சமீபத்தில் ஸ்தலஸ்தாபனமந்திரியே அவ்விதம் உறுதி தந்துள்ளார். கார்ப்பரேஷன் உறங்காது கண் விழித்துக் கடனாற்றுவதாக.

### ஏகாதிபத்திய வலை! எச்சரிக்கை!

"பிரிட்டிஷ் அரசாங்கம் நம் வேண்டுகோளுக்குச் செவி சாய்ப்பதுபோல் நடிக்கிறது. நம்மைச் சமஷ்டி என்னும் வலையில் சிக்குறுத்தவேண்டுமென்பது அதன் நோக்கம். மேலும் உலக நிலையும் பிரிட்டனை நெருக்குகிறது"—இக்கருத்துப்படப் பண்டித ஜவஹர்லால் சமீபத்தில் ஓரிடத்தில் பேசினார். பொது மக்கள் அவரது கூற்றைக் கூர்ந்து சிந்திப்பாராக. ஏகாதிபத்தியம் நேற்றுவரை நம்மை எதிரிகளாகவே கருதி வந்தது; இன்று நம்முடன் உறவாடுகிறது. உண்மைச் சொரூபம் என்றேனும் ஒரு நாள் வெளிப்பட்டே தீரும். ஆகவே இன்று பேசப்படும் இனிய மொழியில் மக்கள் மயக்குறுதல் கூடாது. நமது லக்ஷியம் பூரண விடுதலையே! எச்சரிக்கை!

### சமஷ்டியும் சத்தியமூர்த்தியும்

> சமஷ்டி உபயோகமற்ற பூதம். அது நமது எதிர்ப்புக்கிடையே நம் தலையில் சுமத்தப்படுமேல் நாம் விலகிநிற்கப் போவதில்லை. அதிலும் ஏராளமான பீடங்களைப் பற்றுவோம். எவ்வளவு தொந்தரவு அளிக்க முடியுமோ அவ்வளவையும் அளிப்போம்.

மேற்கண்ட மொழிகள் திரு சத்தியமூர்த்தியினுடையன. நாகபுரியில் ஒரு பொதுக் கூட்டத்தில் அவர் அவ்வாறுகூறினர். சமஷ்டியிலும் காங்கரஸ் புகுமேல் ஏகாதிபத்தியவலையில் அது நன்கு சிக்கிக் கொள்ளுமென்பதை அறிவுறுத்துகிறோம். சமஷ்டி சுமத்தப்பட்டால் ஏகமனதாக அதை எதிர்த்தல் வேண்டும். இன்றேல் சட்ட மறுப்புச் செய்வதே முறை. பொறுப்புள்ள ஒருவர் இவ்விதம் பேசுவது அடாது.

இராஜீயக் கடிதம்

## காங்கரஸ் லக்ஷியம் காற்றிலா?

பொதுஜனங்களின் மகத்தான ஆதரவால் இப்பொழுது சென்னையில் காங்கரஸ் மந்திரிசபை நிறுவப்பட்டுள்ளது. மந்திரிமாரின் செயல்களைச் சற்று ஆராய்வதே இக்கடிதத்தின் நோக்கமாகும். இதனால் காங்கரஸின் கௌரவத்தையோ தனிப் பட்டவர்களின் கௌரவத்தையோ ஒரு சிறிதும் மாசுபடுத்த வில்லையென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சீரிய தொண்டு

மதுவிலக்கு மசோதா, அரசியல் கைதிகள் விடுதலை, கடன் மசோதா, ஸ்தலஸ்தாபன நிர்வாக சீர்திருத்தம் போன்ற பல அரிய தொண்டுகளை மந்திரிமார் ஆற்றியுள்ளார். இக்காரியங்கள் குறித்து மந்திரிமாரைப் போற்றுகிறேன். இன்னும் பல துறைகளில் மக்களுக்குச் சேவைபுரிய அவர்களுக்கு ஆற்றலளிக்குமாறு எல்லாம் வல்ல இறைவனை யிறைஞ்சுகிறேன்.

ஆனால் மக்களுக்கு அதிருப்தி விளைவிக்கும் சில சம்பவங்கள் நேர்ந்துள்ளன. அவைகளைப்பற்றிச் சுயமரியாதையுள்ள எந்த இந்தியனும் கவனியாது வாளாவிருக்க வியலாது.

பிரஜா உரிமை எங்கே?

காங்கரஸ் ஆட்சியில் மக்கள் பூரணமான பிரஜா உரிமைகளை யடைவார்கள் என எதிர்பார்த்தவர்களில் யானும் ஒருவன். எனது நம்பிக்கை பகற்கனவாயிற்று. காங்கரஸ் தேர்தல் விஞ்ஞாபனத்தையும் கராச்சித் தீர்மானத்தையும் மந்திரிமார்க்கு நினைப்பூட்ட விரும்புகிறேன். அடிப்படையான உரிமைகளாகக் கருதப்படும் பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம், கூடும் சுதந்திரம் இவற்றைப் பாதுகாத்தல் அவர் கடனன்றோ? ஆனால் நடப்பதென்னை?

கோத்தப் பட்டணம்

பினுமி மந்திரிசபையாரால் கைது செய்யப்பட்ட கோத்தப்பட்டணம் மாணவர்களைக் காங்கரஸ் மந்திரி சபையார் விடுதலை செய்தனர். விடுதலை அறிக்கைக் குறிப்புகள் இ. பி. கோ. 124 ஐயும் தோற்கடிக்கின்றன. அவைகளை விளக்க விரும்புகிறேனில்லை. அவ்வறிக்கை பிரஜா உரிமையைப் பறிப்பதாகவே தோன்றுகிறது. இளைஞர்கள் மக்களிடையே தீவிரமனப்பான்மையை வளர்த்த விடுதலைப் போரை முனைந்து நடத்த விழைதல் தவறோ?

வீடு சோதனை

மலபாரில் தோழர் சங்கரன் நம்பூதிரிப்பாடின் மனை சோதிக்கப்பட்டது. காரணம் அவர் பறிமுதல் செய்யப் பெற்ற நூல்களை வைத்திருந்ததாகக் கூறப் படுகிறது. இதுபற்றிச் சட்டசபையில் வினாவெழுந்த பொழுது பிரதம மந்திரி கூறியதென்ன? 'சோதனைக்குக் காரணம் சந்தேக மன்று. ஆனால் செய்தி கிடைத்தமையே'' என்றார். சமதர்மிகள் மீது இத்தகைய பாணம் தொடுப்பது முறையோ?

சேக்ஷன் 108

மேலும் சமதர்மத் தோழர் பலர் இ. பி. கோ. 108-வது பிரிவுக்கு ஆளாகி வாய்ப் பூட்டப்பட்டுள்ளார். பொது மக்களிடையே பிரசாரம் செய்யும் உரிமை அவர்களுக்கு மறுக்கப் படுகிறது. அரசாங்கம் அவர்களைக் கண்டு அஞ்சுவதேன்? சமதர்மப் பிரசாரம் செய்வது சட்டவிரோத மன்று எனக் கல்கத்தா, பம்பாய் இரு நகரங்களிலுள்ள உயர்தர மன்றத்தின் நீதிபதிகள் பல வழக்குகளில் கூறியுள்ளனர். மற்றைய மாகாணங்கள் போன்று சென்னையில் தீவிர சமதர்மப் பிரசாரமும் இல்லை.

சேக்ஷன் 144

இந்தப் பிரிவு பிற்போக்காளரின் அரசாங்கத்தின் ஆயுதம். அதனைக் காங்கரஸ் அரசாங்கமும் கையாளுதல் விநோதமே. இதனால் பொதுக்கூட்டங்கள் கூட்டவியலவதில்லை. மக்களிடையே பிரசாரம் குன்றிவிடுகிறது. உறக்கம் மேலிடுகிறது. சுதந்திரப்போரில் கலக்க மக்களைத் தயார்செய்யும் புனிதச்செயல் தடைபடுகிறது. இப்பொழுது சென்னையில் ஒரு பகுதியில் 144-வது பிரிவு தாண்டவமாடுகிறது. இதனால் அண்மையில் வேலை நிறுத்தம் செய்துள்ள கர்நாடிக் மில் தொழிலாளர் கஷ்டப்படுகின்றனர். கூட்டங்கூடித் தம் குறைகளைக் கூறுவதற்கு 3 மைல் தூரம் வர வேண்டி யிருக்கிறது.

வேலை நிறுத்தங்கள்

நாட்டில் எங்குப் பார்த்தாலும் வேலை நிறுத்தங்கள் நிகழ்கின்றன, பொதுஜனப் பிரதிநிதிகளின் அரசாங்கம் நடைபெறுகிறது. குறைகள் நிவர்த்திக்கப்படல் வேண்டும்.

கர்நாடிக் மில் வேலை நிறுத்தமும், சென்னை குட்பாஸ்டர் அச்சுக்கூட வேலை நிறுத்தமும் எக்கதியாகுமோ? பிற்போக்காளரின் போட்டிச் சங்கங்களும் தொழில் மந்திரியின் மழுப்பலும் கண்டு தொழிலாளர் மயங்குகின்றனர். போலீஸாரின் ஆர்ப்பாட்டம் சொல்லத் தரமன்று.

பாட்லிவாலா கைது

பாட்லி வாலா பம்பாய்க் காங்கரஸ் வாதி; சிறந்த சமதர்மி. அவரைச் சென்னை யரசாங்கம் கைதுசெய்து விட்டது. குற்றம் 124ஏ. செக்ஷன்படி ராஜத்வேஷமாகப் பேசியதே என்று சொல்லப்படுகிறது. சிறை மந்திரியும் முதன் மந்திரியும் இதனைச் சரி என்கிறார். இளைஞர் இரத்தம் கொதிக்கிறது!

'பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஆணையை நிறைவேற்றவே நாங்கள் மந்திரி சபையை நிறுவியுள்ளோம்' என அவர் கூறிவிடின் என் கடிதம் முழுவதையும் வாபஸ் வாங்கிக்கொள்கிறேன். அங்ஙனம் அவர் கூறிவிடின் அவருக்கு அரசாங்கம் நடாத்த உரிமையில்லை. பாட்லிவாலா போன்ற தொண்டர்களின் சேவையால் - அவர் புரிந்த தியாகத்தால் - இன்று காங்கரஸ் தலைவர்கள் மந்திரிகளாயுள்ளார் என்பதை யாரும் மறுக்க மாட்டாரென நம்புகிறேன்.

மக்கள் கிளர்ச்சி

மக்கள் கண் விழித்து வருகிறார்கள். அதனை நிதர்சனமாக மந்திரிமார் தமது சுற்றுப் பிரயாணத்தில் கண்டிருப்பர்.

பொது மக்கள் கிளர்ச்சியென்னும் பெரு வெள்ளத்தை எதிர்த்தல் புத்திசாலித்தனமாகாது; இயலவும் இயலாது. கராச்சித் தீர்மானத்தையும், தேர்தல் விஞ்ஞாபனத்தையும் காற்றில் பறக்கவிடுதல் நன்றன்று.

சி. ஆர். சி. ஆரே!

சட்டசபை மனப்பான்மையென்னும் பூதமும், ஏகாதிபத்தியத்தின் கீழ்ச் சேவகத் தன்மையும் அரும்பெருந்தலைவர்களையும் அடிமைப்படுத்தி விடுகின்றன. வங்காள வீரர் தேசபந்துதாஸ் ஒருமுறை சத்தியாக் கிரகிகளைச் சோற்றுக்கில்லாதார் எனக்கூறினர். அக்காலத்தில் அவரைக் காய்ந்த C. R. ஆச்சாரியாரின்று அதே சட்டசபைப் பிசாசின் வயப்பட்டு வேறு மாகாணத்தினின்றும் சோற்றுக் கில்லா வாலிபர்கள் வந்து மக்களிடையேபிரசாரம் செய்கிறார் எனக் கூறுகிறார். C. R. தாஸை C. R. ஆச்சாரியார் விஞ்சிவிட்டனர்போலும். அந்தோ! பாரதத்தாயே! உன் அருஞ் சேய்கள் ஏகாதிபத்திய யந்திரத்தில் அகப்பட்டு இங்ஙனம் பேசுதல் முறையோ? வறுமை! வறுமை வறுமை! என உழலும் மக்கள் நாளை விடுதலை பெறுதல் திண்ணம். அதனை எந்த அரசாங்கமும் தவிர்க்க இயலாது.

(12-ம் பக்கம் பார்க்க)

# குளக்கரைப்பேச்சு

இன்று காலையில் உபாத்தியாயர் சுப்புராயர் குளத்தில்வேஷ்டி துவைத்துக்கொண்டிருந்தார். சாஸ்திரியார் ஸ்னானம் செய்துகொண்டிருந்தார். முதலியார் ஓர் ஆலங்குச்சியால் பல் துலக்கிக்கொண்டிருந்தார். கணக்கப்பிள்ளை சும்மா உட்கார்ந்திருந்தார்.

## நல்ல வேட்டை

"என்ன சாஸ்திரியாரே! இரண்டு நாட்களாக உமக்கு நல்ல வேட்டை போலிருக்கிறது!" என்று கேட்டுக்கொண்டே முதலியாரைப் பார்த்துக் கண்ணைச்சிமிட்டினார் சுப்புராயர்.

"அப்படி ஒன்றும் பிரமாதமான வேட்டையில்லை. ஏதோ சுமாராகக் கிடைத்தது" என்றார் சாஸ்திரியார்.

"அப்பாடா! சென்ற பத்துநாளாக நடந்த வேடிக்கையைச் சொல்லி முடியாது. நவராத்திரி கொலு அவ்வளவு ஆடம்பரம். சிறு குழந்தைகள் முதல் பெரிய பெண்கள் வரை எல்லாரும் குதூகலமாயிருந்தார்கள். ஐயோ! வருஷம் பூராகவும் நவராத்திரியாயிருக்கக்கூடாதா? என்று தோன்றுகிறது" என்றார் சுப்புராயர்.

## சுண்டல்! சுண்டல்!

"ஆஹா! ஒரு விசேஷம் கேளுங்கள்! எனக்குத் தெரிந்த ஒருவர் வீட்டில் கொலு வைத்திருந்தார்கள். அவர்கள் வீட்டில் ஏழு எட்டுக் குழந்தைகள் உண்டு. சாயங்காலம் நாலு மணி முதல் அந்தக் குழந்தைகள் எல்லாம் ஒவ்வொரு வீடாகப் போய்வரும். எல்லார் வீட்டிலும் சுண்டல் கொடுப்பார்கள் அல்லவா? அந்தச் சுண்டலைக் கொண்டுவந்து வைத்திருந்து தங்கள் வீட்டிற்கு வருகிறவருக்கு அதையே திருப்பி விடுவார்கள்!" என்றார் சாஸ்திரியார்.

"பலே! பலே! என்று எல்லாரும் ஆரவாரித்தனர்.

## கலியாண விமரிசை

அதற்குள் முதலியார் சொல்கிறார்:—

"எனக்கு ஒரு சம்பவம் ஞாபகம் வருகிறது. எனக்குத் தெரிந்த முதலியார் ஒருவர் வீட்டில் கலியாணம் நடந்தது. அதே தெருவில் அதே தினத்தில் வேறு ஒருவர் வீட்டிலும் கலியாணம் நடைபெற்றது. முதலியாருக்குத் தம் வீட்டுக் கலியாணத்துக்குச் சாப்பிட ஊரார் எல்லாரையும் 'ஜம்ப'மாக அழைக்கவேண்டு மென்ற எண்ணம். எல்லாரும் சாப்பாட்டுக்கு வந்துவிட்டால் செலவு ஊர்ப்பட்டது ஆகிவிடுமேயென்ற பயம் மற்றொரு பக்கம். என்ன செய்வார்! அந்தக் கலியாண வீட்டில் இலை போடும்வரை காத்திருந்தார்; உடனே இரண்டுபேரை அனுப்பி ஊராரையெல்லாம் சாப்பிட அழைத்து வருமாறு அனுப்பினர். ஊரார் எல்லாரும் மற்றவர் வீட்டில் சாப்பிட வருவதாக ஒப்புக்கொண்டுவிட்டதால் முதலியார் வீட்டுக்கு வரமுடியாது என்று வருத்தம் தெரிவித்தனர். முதலியாரும் திருப்தியடைந்தவர்போல் காணப்பட்டார்."

"ஐயோ! முதலியாரே! முதலியாரைப்பற்றி இவ்விதம் சொல்கிறீரே! அது 'எங்கள் சமூகத்தையே இழிவு படுத்துவதாகும்' என்று யாராவது வழக்குத் தொடரப்போகிறார். ஜாக்கிரதை ஸ்வாமி!" என்று 'கிண்ட'லாகப் பேசினர் கணக்கப்பிள்ளை.

"சொன்னவர் முதலியார்தானே! பாதகமில்லை" என்று ஒத்துப் பாடினர் சுப்புராயர்.

## முதலியாருக்கு வேஷம்!

"இன்றைக்குத்தான் நடந்ததுபோல் எனக்குத் தோன்றுகிறது. நான் சிறுவனயிருந்த பொழுது எங்கள் வீட்டில் விமரிசையாகக் கொலுவைப்பதுண்டு. எங்கள் வீட்டில் வேறு பெண்குழந்தையும் கிடையாது. எங்கள் வீட்டுக்கு எதிரில் ஒரு பிராமணர் வீடு. அந்த வீட்டிலும் ஒரே ஒரு பையன்தான். அவன் வீட்டிலும் கொலுவைத்திருந்தார்கள். அவனும் நானும் ஒரே வகுப்பில் படிக்கிறது. ஊராரை யெல்லாம் கொலுவுக்கு அழைக்க நாங்கள் கிளம்புவோம். சும்மா போனால் நன்றாயிருக்குமா? எங்கள் இருவர் வீட்டாரும் சேர்ந்து எங்கள் இருவருக்கும் வேஷம்போடுவர். கிருஷ்ணனாகவும் ராதையாகவும் நாங்கள் இருவரும் வேஷம் போட்டுக் கொள்வோம். எனது நண்பன் தான் ராதை வேஷம் போட்டுக் கொள்ளவேண்டுமென்று நான் சொல்வேன். அவன் அதற்குச்சம்மதிக்கமாட்டான். 'நீதான் சிவப்பாயிருக்கிறாய். உனக்குத்தான் ராதை வேஷம் பொருந்தும். நான் கறுப்பாயிருக்கிறேன். எனக்குக் கிருஷ்ணன் வேஷம் பொருந்தும். நான் தானே! 'கிளாஸில் பஸ்டு' ஆனதால் நான்தான் கிருஷ்ணன். நீ ராதை. 'ராதே! வா!' என்று நான் சொல்வேன். அவனும் உடனே சம்மதித்து விடுவான். அப்புறம் அவன் வீட்டுக்குப் போனால் அவன் அம்மா என்னைக் கூப்பிடுவார்கள். 'தம்பீ! எங்கள் வீட்டுப் பையனையும் உன்னோடே சேர்த்துக் கொள். நீயே வகுப்பில் முதலாயிரு. அவன் இரண்டாவதாக வாவது இருக்கட்டுமே!' என்பார்கள். 'அதற்கென்ன! அம்மாமீ! அப்படியே செய்கிறேன்' என்று சொல்வேன்" என்றார் முதலியார்.

"முதலியார் பலே பேர்வழி" என்றார் கணக்கப்பிள்ளை.

## கிரிக்கெட் கிறுக்கு

சாஸ்திரியார் சொல்கிறார்:—

"ஐயோ! ஸ்வாமி! பட்டணத்துப் பிள்ளைகளைப் பார்க்கவேண்டுமே! 'கிரிக்கெட்' 'கிரிக்கெட்' என்று கிறுக்குப் பிடித்து அலைகிறார்களே! பேப்பர் வாங்கினல் விசேஷம் என்னவென்று படிப்பதில்லை. 'கிரிக்கெட்ஸ்கோர்' என்ன? பிராட்மென் என்ன சொல்கிறான். மெக்கார்ட்னி என்ன எழுதியிருக்கிறான், என்றுதானே படிக்கிறார்கள். ஐயையோ! நம் பிள்ளைகளுக்கு இப்படியா கிறுக்குப் பிடிக்க வேண்டும்! ஏன் சாஸ்திரியாரே! வாஸ்தவமாகவே அதில் ஏதாவது நன்மையுண்டா! சொல்லுமே! ஸ்வாமி."

"ஒரு 'புடலங்காயுமில்லை'!" என்று கூறிவிட்டு மேலும் உபாத்தியாயர் சொல்கிறார்:—

## கொத்தவரங்காய் வற்றல் மாதிரி!

"ஐயா! இந்தச்சென்னையிலே பார்த்தால் மூன்று வயதுக்குழந்தை முதல் முப்பது வயதான 'மீசை முளைத்த குழந்தை' வரை எல்லாரும் 'நாயடிக்கிற பயல்'மாதிரி ஆளுக்கொரு 'மட்டை'யும் கையுமாகத் திரிகிறார் ஸ்வாமி! ஐயோ! தேர் திருவிழாவுக்குக்கூட அவ்வளவு கூட்டம் இராது. கிரிக்கெட் மாச் எங்கேயாவது நடந்தால் போதும்! இரண்டாந்தரம் டிபனையும் எடுத்துக்கொண்டு கிரிகெட் 'மாச்' பார்க்கப் போய்விடுவார்கள். அடிக்கும் வெயிலெல்லாம் அவர்கள் தலைமேலே! சாயங்காலம் பார்த்தால் ஆசாமி கொத்தவரங்காய் வற்றல் மாதிரி ஆய்விடுவான். அப்படி அந்தக்கிரிக்கெட்டில் என்ன ஸ்வாரஸ்யமோ எனக்குத் தெரியவில்லை. ஆனல் கல்வி மந்திரி கனம் டாக்டர் சுப்புராயனைக் கேளுங்கள்! ஐயா! தப்பித்தவறி 'கிரிக்கெட்டில் என்ன இருக்கிறது' என்று அவர் எதிரில் சொல்லிவிட்டால் தலைதப்புவது தம்பிரான் புண்ணியம்தான். கிரிக்கெட் விளையாடிக் கொண்டே மூன்று நாள் வேண்டுமானலும் அவர் உண்ணு விரதமிருப்பார். அநேகமாக ஹிந்து - முஸ்லிம் சண்டையைக் கிளறிவிடுவது கிரிக்கெட் என்றும் சொல்லலாம். டாக்டர் சுப்புராயனே இதை ஒப்புக் கொண்டிருக்கிறார். நீங்கள் கிரிக்கெட் 'சாம்பிய'னுக வேண்டுமா? சுலபமான சில விஷயங்கள் சொல்கிறேன். கேளுங்கள்! முதலில் முதல்தரமான 'ஸிஸர்ஸ்' அல்லது 'ப்ளேயர்ஸ்' ஸிகரெட் சாப்பிடக் கற்றுக் கொள்ளுங்கள்..............."

"சிவ சிவ சிவ" என்று காதைப் பொத்திக் கொண்டார் சாஸ்திரியார்.

## சாம்பியனுக வேண்டுமோ?

மேலும் சுப்புராயர் சொல்கிறார்:—

"ஆயிற்று; அப்புறம் கூனல் முதுகு வேண்டும். கூனி நடப்பதற்குக் கற்றுக்கொள்ளுங்கள். அப்புறம் நிஜார் சட்டைப்பைக்குள் கையை சதா விட்டுப் பழக்கிக் கொள்ளவேண்டும். கடைசியாக 'விஸ்கி' பாட்டில் உள்ளே தள்ள வேண்டியது. இவ்வளவும் முதல் தரமான கெட்ட பழக்கங்கள். இவை இல்லாவிட்டால் கிரிக்கெட் 'சாம்பியனுக' முடியாதென்பது சிலர் எண்ணம்."

"பேஷ்! பேஷ்" என்று சொல்லிக்கொண்டே எல்லாரும் எழுந்து சென்றனர்.

—கமலம்.

# கால் சட்டைக்குள் பாம்பு

## பரலோகப் பிரயாணம்!

ஷேய்க்பூராவுக்கருகே ஆச்சரியமான சம்பவம் ஒன்று நடந்ததாம். ஒரு மனிதன் மரத்தடியில் படுத்துத்தூங்கிக்கொண்டிருந்தானும். அவன் கால் சட்டை மாட்டிக்கொண்டிருந்தான். கால்சட்டைக்குள் 'வழலை'ப்பாம்பு ஒன்று நுழைந்துகொண்டது. 'ஜிலீ'ரென்ற உணர்ச்சி யுண்டாகவே அவன் விழித்துக்கொண்டான். கால் சட்டைக்குள் பாம்பு ஊர்வதை யுணர்ந்தான். ஒரு நிமிஷ யோசனை! அவ்வளவே! அவன் கால் சட்டையை 'விர்'ரென்று கழற்றினன். பாம்பு கால் சட்டைக்குள் மாட்டிக்கொண்டது. கையில் இருந்த தடியால் ஓங்கி அடித்தான். பாம்பு பரலோகப் பிராப்தியடைந்தது!





# மணித்திரள்

ஜப்பான் தேசத்து அந்நிய நாட்டு இலாகாவுக்கு 'கைமுஷோ' என்று பெயர்.

* * *

தற்கொலை செய்து கொள்வதும் ஒரு வியாதியே யென்று டாக்டர் மெரில் மோர் என்பவர் கூறுகிறார்.

* * *

'எனக்கு நான்கு வருஷ காலம் கொடு' என்பது பேர்லின் நகரில் நடந்த ஒரு பொருட்காட்சிச் சாலையின் பெயராம்.

* * *

சீனதேசத்து மோட்டார் பஸ்களில் பெட்ரோலுக்குப் பதில் கரியே உபயோகிக்கப்படுகிறது. பெட்ரோலின் செலவைவிட ஐந்தில் ஒரு பாகமே கரியின் செலவாகிறது.

* * *

சென்ற ஜுன் மாதத்தில் மட்டும் 1,38,70,000 ரூபாய் பெறுமான அந்நியச் சாமான்கள் இந்தியாவில் இறக்குமதியாயினவாம். நம் நாட்டுச் செல்வம் இங்ஙனம் போதல் சரியோ? இந்தியர்களே விழியுங்கள்!

* * *

இதாலியில் 140000 ஹெக்டர்களிலும் ஜப்பானில் 320000 ஹெக்டர்களிலும் நெல்பயிரிடப்படுகிறதாம். ஒரு ஹெக்டருக்கு ஸ்பெயினில் 64 குவின்டலும், இதாலியில் 46 குவின்டலும் ஜப்பானில் 32 குவின்டலும் விளையுமாம்.

* * *

இந்தியாவில் ஏகருக்கு 2400 பவுண்டும், ஜப்பானில் 33400 பவுண்டும் ஜாவாவில் 11988 பவுண்டும் சர்க்கரை செய்யக்கூடிய கரும்பு விளைகின்றதாம். ஜாவா சர்க்கரை நம்நாட்டுச் சர்க்கரையுடன் போட்டியிடுவதன் இரகசியம் இதுவே.

* * *

ஐம்பது வருஷத்துக்குமுன் இருந்ததைவிட இப்போது குழந்தைகள் உயரமாக விருக்கின்றன என்று டாக்டர் இ. பி. பௌல்டன் கூறுகிறார். இதற்குக் காரணம் உணவில் அதிகமாக உலோகசத்து கலந்திருப்பதே என்று கூறப்படுகிறது.

* * *

1935-ம் ஆண்டு சீனவில் 33656 தபாலாபீசுகளும் 25842 கூட்டுறவுச் சங்கங்களும் இருந்தனவாம்; இப்போது இன்னும் பெருகிவருகின்றன. நெருக்கடியான யுத்த சமயத்தில் மக்கள் ஒன்றுபட்டுத் தொண்டாற்ற இவை உதவி புரியுமா?

* * *

உலகத்தில் மிகவும் குளிர்ந்த பிரதேசம் உஷ்ண மண்டலத்தில் பூமத்திய ரேகையிலிருந்து நூறு மைல் தூரத்திலேயேயிருப்பதாக புரபஸர் டி. பிரண்ட் என்பவர் கூறுகிறார். அவ்விடத்தில் பூஜ்யத்துக்கு நூறு டிகிரி குறைவாகவே சீதோஷ்ணம் இருக்கிறது.

* * *

இங்கிலாந்தின் ஜனத்தொகை 37 மிலியன். அதில் 12,00,000-ம் பேர் செகண்டரிப் பாடசாலைகளிலும் தொழிற் கல்லூரிகளிலும் பயில்கின்றனர். 10 மிலியன் ஜனத்தொகை கொண்ட கானடாவில் 30,000ம் பேர் கல்வி கற்கின்றனர். ஆனல் 370 மிலியன் ஜனத்தொகையுள்ள இந்தியாவில் 10,00,000 வரே கல்விச் சாலைகளுக்குச் செல்கின்றனர்.

## நமது கடமை

உழைப்பதே நமது கடமை. நமது ஜீவிய காலத்திலேயே உழைப்பின் லக்ஷியத்தையடைய வியலாது போகலாம். தன் மக்கள், தன் சமூகம் என்னும் தன்னலங்களை மனத்தே கொள்ளாது தியாகபுத்தியுடன் கடனாற்றுதல் வேண்டும். தொண்டு புரிவதில் வியாபார முறை அணுவும் இருத்தல் தகாது.

—தால்மட்

# உலகக் காட்சி

## கடிகாரங்களுக்கு 'ஸ்டெதாஸ்கோப்'

மனிதனுடைய ஹிருதயத் துடிப்பை அளக்கும் கருவிக்கு ஸ்டெதாஸ்கோப் என்று பெயர். அப்படிப்பட்ட கருவி ஒன்று கடிகாரங்களின் சத்தத்தைச் சோதிப்பதற்கும் உபயோகப்படுத்தப் படுகிறது. அமெரிக்காவிலுள்ள மசாச்சுசெட்ஸ் என்ற நகரத்தில் கடிகாரங்கள் பல செய்யப்படுகின்றன. அந்தக் கடிகாரங்களை வெளி நாட்டுக்கு ஏற்றுமதி செய்யுமுன் அவை ஸ்டெதாஸ்கோப் என்ற கருவி யொன்றால் பரிசோதிக்கப் படுகின்றன. கடிகாரங்களில் குற்றம் ஏதாவது இருந்தாலும் அப்போதே சரிப்படுத்தப்படுகிறது.

* * *

## டெலிபோன் மூலம் மீன் பிடித்தல்

அமெரிக்காவிலுள்ள மசாச்சுசெட்ஸ் நகரத்துக்கருகில் ஒருபெரிய ஏரி இருக்கிறது. அந்த ஏரியில் மீன் பிடிப்பதற்கு அமெரிக்கர் டெலிபோனை உபயோகிக்கிறார். யுத்த காலத்தில் உபயோகிக்கப் படும் நீர்மூழ்கிக் கப்பல்களைப் போல அவ்வேரியிலும் ஒரு நீர்மூழ்கிப் படகு இருக்கிறதாம். அப்படகின் உதவியால் நீரில் மூழ்குவதில் சமர்த்தான ஒருவர் நீரில் மூழ்குகிறார். மீன் அதிகமாகவுள்ள இடங்களைத் தெரிந்துகொண்டு ஏரி கரையில் இருப்பவர்களுக்கு அவ்விடத்தை டெலிபோன் மூலம் தெரிவிக்கிறார். உடனே கரையிலிருப்பவர்கள் அவ்விடத்துக்கு வந்து மீனைப்பிடித்துச் செல்கிறார்கள்.

* * *

## இருட்டில் எதுவும் செய்யலாம்

இருட்டில் நடமாடுவதற்கும் வாசிப்பதற்கும் சுலபமான வழி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுளது. ஜப்பானிய நிபுணர் ஒருவர் ஒரு நூதனமான மூக்குக் கண்ணாடியைக் கண்டுபிடித்திருக்கிறார். அந்த மூக்குக்கண்ணாடியில் சிறிய மின்சார 'பல்பு'கள் இணைக்கப்பட்டிருக்கின்றன. வெளிச்சத்தைப் பிரதிபலிக்கக்கூடிய ஐவ்வுகளும் பொருத்தப்பட்டுள்ளன. அந்த 'பல்பி'லிருந்து நுண்ணிய அபாயமற்ற மின்சாரக்கம்பிகள் ஒரு பாட்டரியுடன் இணைக்கப்பட்டிருக்கின்றன. பாட்டரியைச் சட்டைப்பைக்குள் போட்டுக்கொள்ளலாம். பாட்டரியை அழுத்தினல் மூக்குக்கண்ணாடியிலுள்ள பல்புகள் எரியும். அந்த வெளிச்சத்தால் இருட்டில் உலாவலாம்; படிக்கலாம்; எழுதலாம்; எது வேண்டுமானலும் செய்யலாம்.

* * *

## கடலோட்டத்தைக் காணும் 'ஒயின்' புட்டி

அமெரிக்காவில் கலிபோர்னியா என்பது ஒரு மாகாணம். அம்மாகாணத்தில் மீன்கள் அதிகம். அம்மீன்களை எவ்வெவ்வழியில் சுலபமாகப் பிடிக்க முடியுமென்பதை அவ்வரசாங்கம் ஆராய்ச்சி செய்து வருகிறது. இவ்வாராய்ச்சியில் தற்போது'ஒயின்'புட்டிகள் உபயோகப் படுத்தப்படுகின்றன. அவ்'வொயின்' புட்டிகளுக்குள் ஒரு துண்டுக் கடிதம் வைக்கப்பட்டிருக்கிறது. கடலில் போடப்பட்டஅவ்'வொயின்'புட்டியைக் கண்டடவர்கள் எவ்விடத்தில் புட்டி காணப்பட்ட தென்பதைக் குறித்து அதை அரசாங்கத்தின் மீனைப்பற்றி ஆராய்ச்சிசெய்யும் இலாகாவுக்கு அனுப்புதல் வேண்டும். அதிலிருந்து கடல் நீரோட்டம் எப்பக்கமாகச் செல்கிறதென்பதைக் குறித்துக் கொள்ளப் படும்.

* * *

## இராக்ஷஸ கலப்பை

பெரிய ஆறுகள் உள்ள பிரதேசங்களில் அடிக்கடி வெள்ளச் சேதங்கள் ஏற்படுகின்றன. அதனல் விளை நிலங்களெல்லாம் பாழாகின்றன. அவ்விளை நிலங்கள் வெள்ளத்திற்குப் பிறகு மணல் மேடுகளாகின்றன. அப்பிரதேசங்கள் அதுமுதல் ஒன்றுக்கும் பிரயோசனப்படுவதில்லை. இப்படிப்பட்ட மணல் பிரதேசங்களைச் செழிப்பான நிலங்களாக்குதற் பொருட்டு இப்போது ஒரு புதிய இராக்ஷஸ கலப்பை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இக்கலப்பை ஆறு அடி ஆழம்வரை தோண்டுகிறதாம். அப்படித் தோண்டுவதால் அவ்வாறடிக்குக் கீழுள்ள செழிப்புள்ள மண்மேலே கொண்டுவரப் படுகிறது. வெள்ளத்தால் உண்டான மணல் பூமிக்குள் அழுந்திவிடுகிறது. அவ்வாறு ஆறு அடிக்குக் கீழேயுள்ள செழிப்பான மண்ணை மேலேகொண்டுவருவது ஒரு'பிஸ்டன்'. அந்த 'பிஸ்டன்' நீராவியின் சக்தியால் இயங்குகிறது. இவ்வித இராக்ஷஸ கலப்பையால் இனி வெள்ளத்தால் சேதம் ஏற்பட்டுவிடுமே யென்ற பயம் ஒழிந்துவிட்டது.

* * *

## 'சிவன்கோயில்' ஆராய்ச்சி

அமெரிக்காவிலுள்ள கோலோராடோ மாகாணத்தில் கொண்ட் கன்யான் என்பது ஒரு பிரதேசம். அவ்விடத்தில் 'சிவன் கோயில்' என்ற ஒரு பீடபூமியிருக்கிறதாம். அப்பீட பூமிக்கும் கன்யான் பிரதேசத்துக்கும் இடையில் பொய்மணல் அதிகமுடைய ஆறு ஒன்றும் அவ்வாற்றை யொட்டி பெரியமலைக் குன்றுகளும் இருக்கின்றனவாம். ஆற்றில் பொய்மணல் இருப்பதால் மனிதர் அவ்வாற்றைக் கடந்து செல்லமுடியவில்லை. உயரமான குன்றுகள் இருப்பதால் ஆகாய விமானங்களும் செல்ல முடிவதில்லை. ஒரு காலத்தில் அப்பாகத்தில் பூகம்பம் உண்டாயிற்றும். அப் பூகம்பத்தின் பயனுக 'சிவன் கோயில்' பீடபூமி மற்றப் பாகத்தினின்றும் பிரிக்கப்பட்டது. அமெரிக்க அரசாங்கம் 'சிவன் கோயில்' பீட பூமியை ஆராய்ச்சி செய்ய ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறது. அக்கமிட்டியே இப்போது ஆராய்ச்சி செய்துவருகிறது. அக்கமிட்டியார் 'சிவன் கோயில்' பீட பூமியில் அபூர்வமான மிருகங்களும் பட்சிகளும் இருப்பதாகக் கூறுகிறார்.

* * *

## ஹிருதயத்தின் புகைப்படம்

சினிமா உலகம் பலருக்குப் பலவித நன்மைகளை அளித்து வருகிறது. பள்ளி மாணவர்களுக்குப் பாடங்களெல்லாம் சினிமாக் காட்சிகளின் மூலம் போதிக்கப்படுகின்றன. அப்படி 'ஸ்போர்ட்ஸ்' விளையாடுபவர்களுக்கும் அது உதவி வருகிறது. தற்போது அது வைத்தியர்களுக்கு உதவியாகும்படி வேறொரு முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. 'எக்ஸ்ரே' புகைப் படத்தால் உடலின் எல்லாப் பாகமும் இயங்கிக் கொண்டிருக்கும்போதே புகைப்படம் பிடிக்கப்படும். ஹிருதயத்தை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். உடலிலுள்ள கெட்ட இரத்தம் ஹிருதயத்திற்கு வந்துசேர்கிறது. அங்கிருந்து அது நுரையீரலுக்கு அனுப்பப்படுகிறது. அங்குச் சுவாசிக்கும் காற்றிலுள்ள பிராண வாயு இரத்தத்தோடு கலக்கிறது. அதனல் இரத்தம் சுத்தமடைய அதுமறுபடியும்ஹிருதயத்துக்குவந்து சேர்கிறது. அங்குள்ள மாங்காய் போன்ற 'வெண்டிரிகல்' என்ற பாகம் அந்த சுத்த இரத்தத்தை உடலின் எல்லாப் பாகங்களுக்கும் அனுப்புகிறது. அப்படி அனுப்பும்போது ஹிருதயம் துடிக்கிறது. அத்துடிப்பு அதிகமா குறைவா என்பதைப் பரிசோதிக்க ஹிருதயம்'போடோ' பிடிக்கப்படுகிறது. அப்படிப் போடோ பிடிப்பதில் ஹிருதயத்தின் பாகங்களும், துடிப்பும் தெரிகின்றன. இப் புகைப் படத்தின் உதவியால் சிகித்ஸை செய்வது சுலபமாயிருக்கிறது.

# உதிர்ந்த மலர்கள்

## காலத்தின் கூற்று

இரவின் இறுதியில் உதயம் திரும்பி வருகிறது; ஆனல் வாழ்க்கையின் கடந்த நாட்கள் திரும்புவதில்லை.

கண்ணில் தூரவானத்தில் தீர்க்க தரிசனமிருக்கிறது; உள்ளத்திலோ வசந்த பருவத்தின் காயம் ஆழமாய்ப் பதிந்து கிடக்கிறது.

—லி. டாய். போ

* * *

## இரண்டு ஊற்றுகள்

நம்நாட்டின் தேசிய பாஷையாயிலங்கும் மொழிபற்றி வகுப்புப்பூசல்கள் கூடா. அது தனித்துச் சுதந்திரமாகத் திகழ்தல் வேண்டும். அதில் இருகலை யூற்றுகள் வந்து நிரம்பவேண்டும். பாரசீகக் கலையும் ஆரியக்கலையும் ஒன்ற வேண்டும். காலமாறுதலாலும் வழக்கத்தினலும் புகுத்தப்பட்ட புதிய சொற்கள் பல அதில் இடம் பெறல் நன்று.

—ரவீந்திரநாத் தாகூர்

* * *

## துன்பம்

நிழல், அதன் போக்கிலேயே வளர்ந்துகொண்டு போகிறது. சூரிய வெப்பமோ அதன் தன்மைக் கேற்றவாறு சிறு துளியாய்த் திகழ்கின்றது. ஆனல் அதை நிழல் எப்பொழுதும் பன்னூறு மடங்காகத் தூக்கிக் கொண்டு திரிகிறது. அதுபோல, துன்பம் இன்பத்தினின்றும் தனித்து நிற்கும் பொருளாகும். எல்லையற்ற துன்பங்களின் தொந்தரவுகளாலும் தாக்குதல்களாலும் இன்பம் மயங்கிச் சுருங்கி நிற்கிறது.

—ராஜ தரங்கிணி

* * *

## மஹா புருஷன்

பாரதத்தாய் பல மஹாபுருஷர்களைப் பயந்துள்ளாள். இன்று நம்முன் விளங்கும் மஹா புருஷன் மோஹன தாஸ் காந்தியாவார். உலகத்துக்கே ஒருபுதிய ஜீவனையும் புதிய கொள்கைகளையும் அவர் அளித்துள்ளார். அவரது அஹிம்சா முறையிலேயே உலகத்தில் நல்வாழ்வு நிலவுதல்கூடும். அவரது கொள்கைகளை உலக மக்கள் பின்பற்றியிருந்தால் அபிஸினியா, ஸ்பெயின், சீனம் முதலிய நாடுகளில் இன்றுநிகழும் இரத்தப்போர் இராது. நாட்டு வெறிபிடித்து நாடுகள் ஒன்றோடொன்று பொருதால் உலகில் சுபிக்ஷமும் சமாதானமும் நிலவுமா? இனியேனும் உலகத்தார் காந்திஜீயின் உன்னத வாக்குக்குச் செவிசாய்ப்பாராக.

—கோவிந்த வல்லப பந்த்.

* * *

## மிதவாதம் வேண்டாம்

மிதானம் ஒருவகை வைதிகம். அஃது ஆபத்துக்களையும் அதிதீவிர மாறுதல்களையும் விரும்பாத தன்மையதாகும். இது முதுமைப் பருவத்தின் தவிர்க்க முடியாத தளர்ச்சியின் லக்ஷணமாகும். இத்தன்மை இளைஞரிடத்திலிருத்தல் தீது. நம் நாடோ பழம் பெருநாடு. அதனுல்தான் பாரதத் தாயின் குழவிகள் அலுத்துச் சலித்துப்போய், ஒளி மங்கி, முதுமைப் பருவத்தினர் போலப் பிறக்கின்றன போலும்! ஆனல் இப்பழம் பெருநாட்டிலும் புரட்சி மனப்பான்மை யூட்டும் நவநவமான சக்திகள் தோன்றிவிட்டன. இக்காட்சிகண்டு மிதவாதிகள் அஞ்சுகிறார்கள். பழைய உலகம் மாறிப் போய்க்கொண்டிருக்கிறது. மிதவாதிகளின் சொற்கள் இனி மக்களின் அகத்தே ஏறு. புதிய ஜீவன், புதிய உணர்ச்சி, புதிய இயக்கங்கள் இவையே இனி விளங்கும்.

—பண்டித ஜவஹர்லால் நேரு

## காங்கரஸ் லக்ஷியம் காற்றிலா?

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

ஐ. மா. வைப் பார்

ஐக்கிய மாகாணத்தைக் காண்மின். ஆண்டுப் பொதுக்கூட்டங்களுக்கு சி. ஐ. டி. க்கள் போதல் கூடாது என மந்திரி சபை உத்தரவிட்டுள்ளது. ஆண்டுச் சமதர்மப் பிரசாரம் நடைபெறுவதில்லையோ? அதே முறையைச் சென்னை பின்பற்றலாமே. ஆண்டு அதனைத் தடுக்க முயலாத கவர்னர் இங்குத் தடுத்துவிடுவாரென்ற அச்சமோ? 'அடக்கு முறைச் சட்டங்களை யொழித்தல்' என்னும் தேர்தல் விஞ்ஞாபனக் கொள்கை யாண்டுப் பிறந்தது?

யார் குற்றவாளி?

மந்திரிமாரின் செயல்களைக் கண்டிப்பதால் காங்கரஸின் கௌரவம் குறைந்துவிடும் எனச் சிலர் எண்ணுகின்றனர். அது தவறு. அத்தவறுதலைச் செய்ததின் விளைவாகவே இன்று ஜெர்மனி இதாலி முதலிய தேசங்களில் சர்வாதிகாரம் நிலவுகிறது.

காங்கரஸின் லக்ஷியங்களைக் கைக்கொண்டு அரசியலை உடைப்பதற்கெனவே தலைவர்கள் சட்டசபைப் பிரவேசம் செய்துள்ளனர். அக்கடனை மறந்துவிடில் பொதுமக்கள் அதனை நினைப்பூட்டுதல் வேண்டும். ஏகாதிபத்திய எதிர்ப்பு முன்னணியில் நிற்கும் சமதர்மத்தோழரை, அதே கொள்கைக்குத் தொண்டாற்றுகிறோம் எனப் புகலும் தலைவர்கள் கைது செய்ய முற்படுதல் சரியோ? காங்கரஸ் மகாசபையின் கௌரவத்தைக் குலைப்பவர் யார்? லக்ஷியம் தடைப்பட்டதே, என வருந்தி மந்திரிமாரைத் திருத்தமுற்படும் சமதர்மிகளா? அன்றி லக்ஷியத்தை முறித்து அரசாங்க மனப்பான்மையைக் காண்பிக்கும் மந்திரிமாரா என்பதைப்பொதுமக்கள் தெளிவாராக. சென்னை முதன் மந்திரி கைதுசெய்ய அனுமதிப்பதும், பம்பாய் முதன் மந்திரி கைதிக்கு வழக்காட வக்கீலை நியமிப்பதும் என்ன விநோதம்? இனி அரசியல்அரங்கத்தில் எத்துணை விதமான நாடகங்கள் நடிக்கப்படுமோ?

எதுவாயினும் பொதுஜன சக்திவெள்ளத்தையும் சமதர்மப் பெருக்கினையும் அணையிட்டுத் தடுத்தல் இயலாதென யாவரும் உணர்வாராக. ஓம் சக்தி!

—சமதர்மி.

## அரசியல் குட்டையில் இறங்காதே!

மகாத்மாவின் மணி மொழி

மாணவர்களுக்கு ஹிதோபதேசம்!

"தங்கள் மனத்தில் தோன்றும் அபிப்பிராயத்தைக்கூற மாணவர்க்குச் சுதந்திரம் வேண்டும். அவர்கள் தங்களுக்கு இஷ்டமான ஓர் அரசியல் கக்ஷிக்குப் பகிரங்கமாக ஆதரவளிக்கலாம். படிக்கும் பொழுது நேரடியாக அவர்கள் அரசியலில் கலந்துகொள்ளக் கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம்." மேற்கண்டவிதமாக மகாத்மா காந்தி "ஹரிஜ"னில் எழுதியிருக்கிறார். ஒரு மாணவர் கேட்ட சந்தேகத்துக்கு அளித்த பதில் அது.

காஞ்சீபுரம் குமர கோட்டத்தில் திருப்புகழ் பாடசாலையாரால் 3-10-37ம் தேதியன்று அருணகிரிநாதர் திருநாள் கொண்டாடப்பட்டது. பல பெரியார் சொற்பொழிவாற்றினர். ஏழைகளுக்கு அன்னமளிக்கப்பட்டது.

o o o

காந்திஜியின் தண்டி சத்தியாக்கிரக சம்பந்தமான படத்தின்மீது விதித்திருந்த தடையைப் பர்மா அரசாங்கத்தார் எடுத்து விட்டனராம். இது காந்தி யடிகளின் ஆத்மசக்தியின் செயல் போலும்.

## கலம்பகம்

குவெட்டாவில் அடிக்கடி பூமியதிர்ச்சி ஏற்படுகிறதாம். நாட்டில் அதிக்கிரமம் பெருகக் கண்டு அன்னை பூமிதேவி வெஞ்சினம் கொள்கிறாள் போலும்.

o o o

பர்மாவிலும் 'ஜப்பான் சாமான்களைப் பகிஷ்கரியுங்கள்' என்ற கூக்குரல் கிளம்பியிருக்கிறது. ஜப்பானின் இறுமாப்பும் யுத்த வெறியும் அடக்கப்பட வேண்டும்?

o o o

ராஜமஹேந்திரவரம் ஜில்லா போர்ட் கூட்டத்தில் ஸ்தலஸ்தாபன மந்திரி திரு. பி. கோபால் ரெட்டிக்கு ஒரு வரவேற்புப் பத்திரமளிப்பதாகத் தீர்மானிக்கப்பட்டது.

o o o

வட ஆற்காடு ஜில்லா புன்னைப் புதுப்பாளையம் சமரச சன்மார்க்க சங்கத்தின் ஆதரவில் காந்திஜயந்தி விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. பல பிரமுகர் கலந்து கொண்டனர்.

o o o

வங்க மாகாணக் காங்கரஸ் கமிட்டியின் உதவிக் காரியதரிசியும் வங்கத் தொழிற் சங்கக் காரியதரிசியுமான கமால் சர்க்கார் கைதுசெய்யப்பட்டார். பிரஜா உரிமை காற்றில் பறக்கிறது போலும்.

o o o

ஜப்பான் சாமான்களைப் பகிஷ்கரிக்குமாறு ஆங்கிலோ இந்தியத் தலைவரான சர் ஹென்றி கிட்னி ஓர் அறிக்கை விடுத்துள்ளார். ஆங்கிலோ இந்திய சமூகத்தவர் தாமும் இந்தியர் என்பதை உணர்ந்து நடந்து கொள்வாராக.

o o o

லார்ட் நபீல்ட் என்னும் கோடீஸ்வரர் இதுவரை தர்மகாரியங்களுக்காக 85 லக்ஷம் பவுன் வரைக் கொடுத்திருக்கிறாராம். யுத்ததளவாடங்களுக்கு ஒன்றும் கொடுக்கவில்லையே என ஏகாதிபத்தியங்கள் உறுமுகின்றன போலும்!

o o o

டெல்லிச்சட்டசபை முஸ்லிம் அங்கத்தினர்கள் பாலஸ்தீனத்தைப் பிரிப்பது மிகவும் தவறான காரியமெனத் தீர்க்கமான அபிப்பிராயம் கொண்டுள்ளனராம். இதே தீவிரமனப்பான்மையை நம் நாட்டு விடுதலைப் போரில் அவர் காட்டுவாராக.

o o o

அகில இந்திய அரசியல் கைதிகள் விடுதலை மகாநாட்டில் டாக்டர் கோபிசந்த் பார்கவா தலைமை வகித்தார்; நாடு கடத்தப் பட்ட பாரதபுதல்வர்களின் மேலுள்ள தடையை அகற்றிவிட வேண்டுமெனக் கூறினர். காங்கரஸ் மந்திரிமார் இதற்காகப் பாடுபடுவாராக.

o o o

ஒய். எம். சி. ஏ வில் நடந்த கூட்டமொன்றில் ஆசிரியர் வர்க்கி கலாசாலைக் கல்வியின் பயனற்ற தன்மையைப்பற்றி விளக்கினர்; தொழிற் கல்வியும், வர்த்தகக் கல்வியுமே இப்பொழுது இன்றியமையாதன எனக் கூறினர். காங்கரஸ் மந்திரிமார் கல்வி முறையை நன்கு மாற்றி யமைப்பாராக.

o o o

டெல்லியில் நடந்த ஒருபெரும் பொதுக் கூட்டத்தில் ராஷ்டிரபதி பண்டித ஜவஹர்லால் நேரு பேசினர். உலகத்தில் யுத்தமேகங்கள் மண்டியிருக்கிறதென்றும், இந்தியமக்கள் அவற்றை நன்கு ஓர்ந்து ஒன்றுபட்டு விடுதலைப் போரில் இறங்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். மக்கள் கவனிப்பார்களாக.

o o o

பஞ்சாப் மாகாண கிருஷிகர்கள் மகாநாட்டில் சிறு புலங்களுக்கு வரி விதிக்கக் கூடாதெனவும், விவசாயக் கடன் பளுவைக் குறைக்கவும், மற்றும் பல குறைகளைப்பற்றியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. நாட்டின் முதுகெலும்பா யிலங்கும் விவசாயிகளின் விஷயம் சரிவரக் கவனிக்கப்படுமென நம்புகிறோம்.

o o o

பீகார் மாகாணத்தில் 4000 ஜமீன்தார்கள் சேர்ந்த ஒருதூது கோஷ்டியார் கவர்னரிடம் சென்றனர். சட்டசபையில் தீர்மானம் செய்யப்பட்ட புதிய நிலஉரிமைச் சட்டம் தங்களுக்குத் தீங்கு விளைப்பதாகக் கூறினர். கவர்னரின் தடைக்கு அஞ்சி மந்திரிமார் ஏழைகளின் துயரைப் போக்க முற்படாவிடில் அது பெருந் தீங்கே.

o o o

இருபத்து நான்குமணி நேரத்தில் பஞ்சாபைவிட்டு வெளியேறி விட வேண்டுமென்ற சர்க்கார் உத்தரவை மீறியதற்காகத் தோழர் பகவான் லாங்கோவாலாவுக்கு ஒன்பது மாதக் கடுங்காவல் தண்டனைவிதிக்கப்பட்டது. ஏகாதிபத்தியத்தின் இயந்திரங்களாக விளங்கும் பிற்போக்கு ராட்சியின் செயல்களில் இதுவுமொன்று.

தேவி பிலிம்ஸ் "புரந்தர தாஸ்" - மாமியின் கொடுமை.

## வேல்ஸ் சுதந்திரப் போர்

### அந்நிய ஆட்சியை அகற்ற

தேச மக்களின் எழுச்சி

கட்டடத்துக்குத் தீ வைத்தார்கள்

வேல்ஸ் நாட்டு மக்கள் நெஞ்சங் கொதிக்கிறார்கள். அவர்களுக்குச் சுதந்திர தாகம் பெருக்கெடுத்து ஓடுகிறது. அறிஞர் ஸாண்டர்ஸ், பூஜ்யர் வாலன்டைன், வில்லியம்ஸ் ஆகிய மூவரும் கைது செய்யப்பட்டுச் சமீபத்தில் விடுவிக்கப்பட்டனர். அப்பொழுது அவர்களுக்குப் பெருமிதமான வரவேற்பளிக்கப்பட்டது. அப்பொழுது அவர்கள் தீப்பொறி பறக்கப் பேசினார்கள். இங்கிலாந்தின் ஆட்சிமுறை கண்டனஞ் செய்யப்பட்டது.

இங்கிலாந்து, ஸ்காட்லந்து முதலிய விடங்களிலிருந்து ஏராளமான வேல்ஸ் மக்கள் வந்து கூடினார்கள்.

பன்னீராயிரம் மக்கள் திரண்ட பெருங் கூட்டத்திடையே சுதந்திர கர்ஜனை செய்யப்பட்டது.

"வேல்ஸ் நாடு அடிமைப்பட்டிருக்கிறது. வேல்ஸ் மக்கள் அடிமைகளாகப் பாவிக்கப்படுகிறார்கள். நமது ஏக மனதான எதிர்ப்பையும் பொருட்படுத்தாது இங்கிலாந்து ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தியது. ஆகவே நாங்கள் அதற்கு நெருப்பு வைத்தோம்; கைது செய்யப்பட்டோம். இங்கிலீஷ் அரசாங்கம் இப்பொழுது நடுங்குகிறது. ஏன்? நமது சுதந்திர தாகத்தை அது கண்டு கொண்டது. இந்நாட்டு மக்களின் எழுச்சியை அது உணர்ந்து கொண்டது."

"வேல்ஸ் மாதாவின் கையும், காலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் பிணைக்கப்பட்டிருக்கின்றன. சென்ற மகாயுத்தம் அதை நமக்கு அறிவித்தது. இப்பொழுது வரப்போகும் யுத்தத்தில் வேல்ஸ் என்ன செய்யப் போகிறது? தேசிய சபையார் அதற்குப் பதிலளித்துள்ளார்."

என்று அவர்கள் பேசினார்கள்.

## ஆள் தேய்ந்து போகிறான்

எல்லாரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகவளர்வதுண்டு. நாளுக்குநாள் குள்ளமாகும் அதிசயத்தைக் கேட்டதுண்டோ? கலிபோர்னியா தேசத்தில் ஜோக்வின் என்று ஒருவனிருக்கிறான். ஏழு வருஷங்களுக்கு முன்பு அவன் ஐந்தடி நாலங்குல உயரமிருந்தான். இப்பொழுது அவன் நாலடி பத்தரை அங்குல உயரமேயிருக்கிறான். 'ஏதடா? இவன் நாளுக்குநாள் தேய்ந்து போகிறானே' என்று எல்லாரும் அதிசயித்தனர். டாக்டர்கள் முயற்சி ஒன்றும் பலிக்கவில்லை. 1930-ம் வருஷம் ஒரு விபத்தில் அவன் முதுகு எலும்பில் காயம் பட்டதாம். அது முதல் ஆள் தேய்ந்து போகிறான்.



## கொள்ளை கொள்ளும் நோய்

மக்களைப் பிய்த்தெடுக்கும் வறுமைப் பிணி தொலைதல்வேண்டும். அவர்களது வாழ்க்கைத்தரம் அபிவிருத்தி யடைதல்வேண்டும். இல்லாதவரை வியாதிகள் எல்லாம் சேர்ந்து மக்களைக் கொள்ளை கொண்டு செல்லும் வண்ணமாகவே யிருக்கும். அவற்றைத் தடுக்கத் தலைகீழாக முயன்றாலும் முடியாது.

—"லீடர்"

## எதில் சத்து என்று தெரியாதா?

இந்திய மக்கள் சத்தில்லாத உணவையே சாப்பிடுகிறார்கள். எந்த உணவில் சத்து அதிகம் என்பது அவர்களுக்குத் தெரியாதா? தெரியும். தரித்திரத்தின் கொடுமை அத்தகையது. உணவில் சத்து இருக்கிறதோ இல்லையோ பசியை ஆற்றுவதற்கு 'உணவு' என்று கிடைத்தால் போதும் என்ற நிலையில் அவர்கள் இருக்கிறார்கள்.

—"ஹிந்துஸ்தான் டைம்ஸ்"

## சென்னையைப் பார்!

ஆலைத்துணி மீது சிறு வரி விதிக்கச் சென்னை அரசாங்கம் விரும்புகிறது. அது நல்ல காரியமே. ஆலைகளுடன் போட்டியிட வேண்டி யிருக்கும் கைத்தறிகளுக்குச் சிறிது பாதுகாப்புக் கிடைத்திருக்கிறது. சென்ற பல வருஷங்களாகக் கைத்தறி நெசவாளர்க்குச் செய்து வந்த அநீதிக்குச் சிறு விமோசனம் தேடப்பட்டுளது. மற்ற மாகாணங்களும் இம்முறையைப் பின்பற்றுவதாக.

—"பாம்பே கிரானிகல்"

## பதவியேற்றும் சந்தேகமா?

காங்கரஸ் மந்திரிமாரின் தபால்கள் தணிக்கை செய்யப்படுகின்றனவா? இக்கேள்வி பொது ஜனங்களுக்கு அக்கரையில்லாததென்று இந்தியச் சட்டசபையில் சொல்லப்பட்டது. இதிலிருந்து அந்தச் சந்தேகம் உறுதிப்படுத்தப்படுகிறது. அவ்விதம் தணிக்கை செய்யப்படுவது உண்மையானால் யாரால் செய்யப்படுகிறது. மத்திய அரசாங்கத்தினலா? மாகாண அரசாங்கத்தாலா? காங்கரஸ் மந்திரி பதவியிலிருந்தும் பிரிட்டிஷாருக்கு அதன்மீது சந்தேகமா?

—"ஹிதவாதா"

## நாற்பது கோடி அடிமைகள்!

நம் நாட்டின் ஜனத்தொகை வரவர அதிகரித்துக்கொண்டே வருகிறது. இன்னும் சில காலத்தில் நாம் நாற்பது கோடி அடிமைகளாகி விடுவோம்! நமது ஜனத்தொகை அதிகரிக்க அதிகரிக்க நமது மக்களின் சுகாதாரம் மோசமாயிருக்கிறது. காலரா, பிளேக், மலேரியா முதலிய நோய்கள் வாட்டுகின்றன; மக்களின் உயிரைக் கொள்ளை கொள்கின்றன. காசநோய் மக்களின் 'கழுத்தை யறுக்கிறது'! சத்துள்ள ஆகாரம் இன்மையே இவற்றிற்குக் காரணம். "சத்தற்ற ஆகாரம் சாப்பிடுவதால் தீமை யுண்டாகிறது. தீமையை உணராத வரையில் மலேரியாவைப் பற்றியும், காசநோயைப்பற்றியும், குஷ்டத்தைப்பற்றியும் பிரசாரம் செய்வதால் பலனில்லை; பிரசவ உதவியும், குழந்தை போஷணையும் பயன் தரா" என்று சுகாதார கமிஷனரின் அறிக்கை கூறுகிறது. சத்தற்ற ஆகாரம் சாப்பிடுவதற்கு வறுமைப்பிணியே காரணம். முதலாளித்துவ ஏகாதிபத்திய சமூகத்தில் இப்படித்தானிருக்கும்.

—"காங்கரஸ் ஸோஷலிஸ்டு"

## சாம்ராஜ்ய பந்தம் வேண்டாம்!

சமஷ்டியினால் ஏற்படும் நன்மைகளைப் பற்றி இராஜப்பிரதிநிதி லின்லிதோ வானளாவப்புகழ்கிறார். சமஷ்டி இந்தியாவின் தத்துவத்தை நாம் எல்லோரும் ஒப்புக் கொள்கிறோம். ஆனால் புது அரசியலில் காணப்பட்டுள்ள இந்தச் சமஷ்டியையே நாம் எதிர்க்கிறோம். இத்தமாதிரியான சமஷ்டிதான் இந்தியாவுக்கு ஏற்றதென்றோ? இதற்குமேல் செய்யமுடியாதென்றோ நாம் கருதவில்லை. இந்தியாவின் தேசிய உணர்ச்சியைக் குழிவெட்டிப் புதைப்பதற்கே இந்தச் சமஷ்டி காணப்பட்டுளது. இந்தச் சமஷ்டியாலும் ஏற்படக்கூடிய பொருளாதார நன்மையை நாம் அறியாமலில்லை. ஆனால் புது அரசியலில் காணப்படும் பாதகங்கள் யாவும் இச்சிறு நன்மையையும் பறித்து விடுகின்றன............இராஜப் பிரதிநிதியின் பேச்சு என்னவோ வெல்லமாகத்தானிருக்கிறது. கை கருணைக்கிழங்காயிருக்கிறதே! இந்தியாவுக்குப் பார்லிமென்டரி ஆட்சிமுறை வழங்கப்பட்டிருக்கிறதாம். பிரிட்டிஷாரால் பாரத நாட்டுக்கு அளிக்கப்பட்டுள்ள அரசியல், ஜனநாயக தத்துவங்களை அடிப்படையாகக்கொண்டதாம்! இந்தியாவில் மனிதனின் மனம் சிறைப்படுத்தப்பட்டிருக்கிறது. பேச்சுரிமை, எழுத்துரிமைகள் நசுக்கப்பட்டுள்ளன. இஷ்டப்படி வாழ்வதும் திரிவதும், சுதந்திரமாயிருப்பதும் மனிதனின் அடிப்படையான பிரஜா உரிமைகள். அவை வங்காளத்திலும் மற்றும் பல விடங்களிலும் கிடையவே கிடையா. லார்டு லின்லிதோ சொல்லும் வேதாந்த தத்துவங்களை இந்தியா ஒப்புக்கொள்கிறது. ஆனால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் ஓர் அங்கம் பெற்றுவாழ இந்தியா விரும்பவில்லை. அதை இந்தியா வெறுக்கிறது. 'பிரிட்டன் தாய், இந்தியா அதன் மகள்' என்ற ஹோதாவில் வாழ பாரதநாடு விரும்பவில்லை. பாரதநாடு பழம் பெருநாடு. பாரதத்தாய் வயதில் யாருக்கும் இளையவளல்லள். உலகத்துச் சுதந்திர நாடுகளில் ஒன்றாயிருக்கவே இந்தியா விரும்புகிறது.

—"மாடர்ன் ரெவியூ"

## ஏகாதிபத்திய இயந்திரத்தில் கோளாறு!

காங்கரஸ் மந்திரிமார் கவனிக்க

காங்கரஸின் லக்ஷியத்தையும், புது அரசியலை உடைப்பதையும் மறந்துவிடாமல் மக்களின் கஷ்டத்தைப்போக்க மந்திரிமார் முயலுதல் வேண்டும். அரசியல் கோட்டைக்குட்பட்டு ஏதாவது சாதித்து மக்களின் கஷ்டத்தைப் போக்கிவிடலா மென்பது முடியாத காரியம். வரவு செலவில் நஷ்டமும், கவர்னரின் விசேஷாதிகாரங்களும் குறுக்கே நிற்கும். அவை மந்திரிமாரைப் பயமுறுத்தும்; சட்ட வரம்புக்குட்பட்டுக் காரியம் நிகழ்த்தச் சொல்லும். அவற்றிற் கெல்லாம் உட்படுவதாயிருந்தால் மக்களுக்கு ஒன்றும் செய்ய முடியாதென்பதை மந்திரிமார் அறிவாராக. கஷ்டப்படும் மக்களுக்கு நிவாரணமளிப்பதுதான் முக்கியமே யொழிய ஏகாதிபத்தியத்தின் வரவு செலவுத் திட்டத்தைச் சரிக்கட்டுவது முக்கியமில்லை. பொது மக்களுக்கு அதிக நன்மை செய்வதால் ஏகாதிபத்திய இயந்திரத்தில் கோளாறு உண்டாகும். உண்டானால் நல்லது தானே! சுதந்திரப் போராட்டத்தில் பாதை கரடு முரடா யிராது. காங்கரஸ் தேர்தல் அறிக்கையில் ஏராளமான வாக்குறுதிகள் அளிக்கப் பட்டுள்ளன. அவை எல்லாவற்றையும் உடனேசெய்வதென்பது முடியாத காரியம். ஆனால் ஆரம்பம் செய்து வைக்கலாம். காங்கரஸ் மந்திரிமார் ஆரம்பித்திருக்கும் முறை தவறானது. கஷ்ட நிவாரணம் யாருக்குத் தேவை? மக்களுக் கன்றோ? ஆகவே தங்களுடைய குறைகள் யாவையென்பதை அவர்கள் தெரிவிக்கட்டும். முக்கியமாகச் செய்யப்படவேண்டிய நிவாரணம் எது என்பதை அவர்கள் சொல்லட்டும். அவர்களே சொல்லட்டும்; வேறு ஒருவர் தேவையில்லை. மக்களின் தேவை அறிந்து தெரிவிக்கும் பொருட்டுக் கிராமக் காங்கரஸ் கமிட்டிகளுக்கு ஆணையிடுவது நல்லது. அப்பொழுது ஜனங்களது மனம் ஒன்றுபட்டு மந்திரிமார்க்குப் பலமளிக்கும். தேசமெங்கும் ஒரேமாதிரி முறையில் சட்டசபைப் போராட்டம் தீவிரமாக நடக்கும். நமது மந்திரிகளும் சட்டசபை யங்கத்தவர்களும் நமது சேனையில் ஒருபகுதியினர், ஒரு குறிப்பிட்ட லக்ஷியத்துடன் அவர்கள் அனுப்பப்பட்டுள்ளார்கள். அவர்களிடம் ஒரு திட்டமும் அளிக்கப்பட்டுளது. அதை நிறைவேற்றி வைக்கும் பொறுப்பு அவர்களுடையது.

—"இண்டிபெண்டெண்ட் இந்தியா"



## சுதந்திரப் போரை ஒத்திப்போடுவதா? லக்ஷியத்தை மறப்பதா?

காங்கரஸ் மந்திரிகள் பதவி ஏற்று மூன்று மாதங்களே ஆகின்றன. இக்காலத்தில் பொது மக்களுக்கு நலன் விளைக்கக்கூடிய பல காரியங்களை அவர்கள் நிகழ்த்தி யிருக்கிறார்கள். அரசியல் சட்ட வரம்புக்குட்பட்டு அவர்கள் செய்யக்கூடிய காரியங்கள் எவ்வளவோ செய்யப்பப்படாமல் இருக்கின்றன. பிரஜா உரிமை விஷயமாகக் காங்கரஸ் மந்திரிமார் செய்ய வேண்டிய காரியம் ஜாஸ்தி யிருக்கிறது. ஜனங்களுக்குக் கஷ்ட நிவாரண மளிக்கும் விஷயத்தில் சில மாகாணங்களில் மந்திரிமார் நடத்தை திருப்தியளிக்கக்கூடியதா யில்லை. ஆனாலும் முடிவு கட்டுவதற்குக் காலம் இன்னமும் வரவில்லை. ஏனென்றால் அவர்கள் பதவி ஏற்றுச் சொற்ப காலமே ஆகிறது. அவர்களுக்கு வேண்டிய அவகாசம் அளித்தல் வேண்டும். எல்லா விஷயங்களிலும் காங்கரஸ் நிர்மாணத் திட்டத்தின்படி நடக்குமாறு நாம் மந்திரிமார்க்கு அறிவுறுத்துகிறோம். காங்கரஸ் கொள்கையின் தத்துவத்தையும், திட்டத்தையும் மறந்து நடக்கக்கூடிய மனப்பான்மை சிற்சில விடங்களில் தோன்றுவதாகத் தெரிகிறது. அது கண்டு நாம் பயப்படுகிறோம். மந்திரிபதவி ஏற்றமைக்குக் காங்கரஸ் தீர்மானம் என்ன சமாதானம் கூறுகிறது? புது அரசியலைத்தகர்க்கவும், ஏகாதிபத்திய எதிர்ப்புப்போராட்டத்தைப் பலப்படுத்தவுமே பதவி ஏற்கப்பட்டது. பொதுமக்களுக்குஅற்ப நன்மைகளைச்செய்து அரசியலை நடத்திவைக்கப் பதவி ஏற்கப்படவில்லை. காங்கரஸ் தீர்மானத்தை அறவே மறந்து அரசியலை நடத்தி மக்களுக்கு நிலவரமற்றநன்மைகளைச் செய்யச்சிலர் விரும்புவதாகத் தெரிகிறது. ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுக்கு நன்மை தேட வேண்டுவது அவசியமே. அதற்காக நமது சுதந்திரப்போரை ஒத்திப்போடலாமா? நமது இயக்கத்தின் லக்ஷியத்தை மறக்கலாமா? ஏகாதிபத்தியத்தை ஒழிக்காமல் ஜனங்களின் தரித்திரத்தைப் போக்குதல் முடியாது. ஏகாதிபத்தியத்தின் மூலம் அற்ப நலன்களைப் பெறுவதைவிட ஏகாதிபத்தியத்தை ஒழித்து ஈறிலாஇன்பம் பெறுவது நல்லதன்றோ? அதுவே காங்கரஸின் கொள்கை.

—"இண்டிபெண்டெண்ட் இந்தியா"

"வீர சுதந்திரம் வேண்டிநின்றார்—பின்னர்
வேறொன்று கொள்வாரோ?—என்றும் [இரு]ளில்
ஆமுதுண்ணுதற்காசை கொண்டார்—கள்
அறிவைச் செலுத்துவாரோ?" —பாரதி

## சிப்பாய்களைத் தின்பதா?

### ஹிட்லர் நாட்டில் ரோஷம்!

'சாகலட்' செய்யாதே!

ஜெர்மானியருக்கு ஹாஸ்யச் சுவை கிடையாதாம். வாஸ்தவமே! சென்ற மகாயுத்தத்தில் தன் குடியேற்ற நாடுகளை யெல்லாம் இழந்தநாடு - தரைமட்டமாக்கப்பட்ட நாடு - ஹாஸ்யச் சுவையை அனுபவித்துக் கொண்டிருந்தால் கடைத் தேறுவது எப்பொழுது! 'நாஜி'கள் அதிகாரத்துக்கு வந்ததும் தேசத்தின் பலவீனத்தை நாட்டு மக்களுக்கு உணர்த்தினார்கள். அங்கே 'சாகலட்' பொம்மைகள் தின்பண்டமாக விற்கப்படுவதுண்டு. அநேகமாக சிப்பாய்களைப் போலவே பொம்மைகள் செய்யப்படும். தாய் நாட்டுச் சிப்பாய்களைக் குழந்தைகள் தின்பதா? அதுவும் பொம்மையாகப் பண்ணித் தின்பதா? அதையும் அந்நிய நாட்டார் தின்பதா? கேவலம்! வெட்கம்! ஜெர்மானியருக்கு வீரம் செத்துப்போகும். இவ்வித எண்ணத்தால் தூண்டப்பட்ட அரசாங்கம் அவ்விதம் பொம்மைகள் செய்யப்படுவதைத் தடுத்து விட்டது.






# அறிவும் கல்வியும்

(திரு. ஆ. குமாரகுருபர ஆதித்தர்)

நிறைவுடைமை, அதாவது அறிவின் பரிபக்குவம், பெறச்செய்வதே கலாசாலைகளின் நோக்கமாகும். அறிவின் பரிபக்குவம் என்றால் என்னவென்று இனி ஆராய்வோம். அது இத்தகையது என்று விளக்குவதும் அதன்பொருளைப் பிறிதொரு சொல்லால் தெரிவிப்பதும் மிகக்கஷ்டமாகும். அறிவின் பரிபக்குவத்தைச் சாதுரியம் என்றுசொல்வதற்குமில்லை. சாதுரியம் என்பது ஒருவரிடத்தில் இயற்கையில் தானாகவே அமைகின்ற ஒரு திறமை. விவேகம் என்று கூறின் அதுவும் பொருந்தாது. விவேகம் என்பது ஒரு சார்பு பற்றியுள்ள ஒரு புத்தியின் திறமையைக் குறிக்கிறது. யூகம் என்று குறிப்போமாயின் அது ஒருவரின் பரந்த ஞானத்தையும் அவர்தம் வாழ்வின் நடக்கையையும் காட்டுவதால் அதுவும் பொருந்துவதில்லை. விஷய ஞானம் என்றால் அது புத்தியின் திறமையைக் குறிப்பதில்லை. இவ்வார்த்தைகள் கொண்டுள்ள பலநுட்ப அம்சங்களின் அமைவே அறிவின் பரிபக்குவமாம்; அதுவே நிறைவுடைமையாம். அறிவு விருத்தி செய்தல் ஒரு மேலான காரியமாகும். ஆனால் அறிவு வளர்ச்சி என்னும் நோக்கம் பற்றியே அதைச்செய்தல் வேண்டும். பொருள், புகழ் கருதி அறிவு வளர்ச்சித் துறையில் ஈடுபடுவது தக்க ஒரு காரியமாகாது.

### கலாசாலை அறிவு

அறிவின் பெருக்கத்தைச் சிலர் தத்துவமென்பர்; சிலர் தத்துவஞானமென்பர்; சிலர் மனோவிசாலமென்பர்; சிலர் ஞானஒளி என்பர். பலரும் பல பெயரால் அதைக்கூறி வரட்டும். பெயரினால் ஆவதென்ன? ஒரு சிலம்பக்கூடம் பலருக்கு வித்தைகற்பித்து வருகிறது. எதற்காக? அதன் உள்நோக்கம் என்ன? சரீரதிடம் உண்டாக்குவதே அதன் நோக்கம். அவ்வாறே கலாசாலைகளும் அறிவின் பரிபக்குவத்தையே உள் நோக்கமாகக் கொண்டு உழைக்கின்றன. கலாசாலைக் கல்வி நேர்முகமாக திறமை, சன்மார்க்கம் முதலியன பற்றிக் கட்டாயமாகப் போதிப்பதில்லை. அது அறிவை வளர்த்து விடுகிறது. அதனால் மாணவர்கள் தாமாக உண்மையை அறிந்து கைக்கொள்ள வேண்டியவர்களாக விருக்கிறார்கள்.

### அறிவு விருத்தி

இதற்கு முந்திய வியாசத்தில்அறிவு விருத்தி ஒரு மேலான காரியம் என்றும், நோக்க மென்றும் நன்கு வலியுறுத்திக் கூறியிருக்கிறோம். இங்கு அறிவு விருத்தி எத்தகையது? அது எத்தகைய நற்குண நன்னடக்கைகட்கு வழி காட்டுகிறதென்று ஆராய்வோம். அறிவின் பெருக்கத்துக்கும், ஜீவனார்த்தக் கல்வி, மதக்கல்விகட்கு முள்ள தொடர்பைக் கவனித்துணர்ந்தால் முந்தியதே மேலானது என்பதுதெளிவாக விளங்கும்.

### விஷயசேகரம்

கலாசாலை என்பது பலவிஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளக் கூடிய ஓர் இடம் என்று பொது ஜனங்கள் நினைக்கிறார்கள். பழக்கத்தில் அங்குண்டாகி வளர்கின்ற மனோசக்திகள் பலவற்றுள் முதன்மையாக நாம் காண நிற்பது ஞாபக சக்தியாம். எவ்வாறெனின் கல்லூரி மாணவனொருவன் தான் கலை பயிலும் காலம்வரை பலவிஷயங்களைப் பற்றிப் படித்து அவையனைத்தையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்கிறான். கல்லூரியில் அவன் வாழும் கால முழுவதும் விஷயங்கள் திரட்டுவதிலேயே செலவாகின்றது. இவ்வாறு விஷயஞானங் கொண்டபின்னர் அவன் கருத்துக்கள் ஆதியில் அவன் கலாசாலை சேரும்போது கொண்டிருந்த கருத்துக்கட்கு முற்றும் மாறாகவே தோன்றுகின்றன. இவ்விஷய சேகரம் பின்னர் அவன் புரியும் உபந்நியாசங்கட்கு மிகுந்த உதவியாக விருக்கிறது. அறிவு விருத்தியும் விஷயசேகரமும் ஒன்று என்று மக்கள் கருதுகிறார்கள்; ஒருவகையில் அதுவும் சரியே. ஏனெனில் விஷய சேகரமே அறிவுவளர்ச்சிக்கு அடிப்படையாக விருக்கிறது. விஷயஞானம்தோன்றியே தத்துவ ஞானம் தோன்றல் வேண்டும். ஆனால் விஷய சேகரமும் அறிவு விருத்தியும்ஒன்றே. கலாசாலைக் கல்வியின்நோக்கம் விஷய சேகரமே என்னும் அபிப்பிராயம் முற்றும் தப்பாகும். இதனைச் சில உதாரணங்களால் விவரிப்பாம்.

### விஷய ஞானம்

காட்டுப்புறத்தான் ஒருவன் முதன் முதலாக ஒரு பட்டணத்துக்குள் பிரவேசிக்கிறானென்று வைத்துக் கொள்வோம். அப்போது அவன் காண்பதென்ன? அவனுக்குள் ஒருவிதப் பூரிப்பு; முகத்தில் சிறு மகிழ்ச்சி; நெஞ்சில் நூதன உணர்ச்சி. நகர அரவமும், ஆரவாரக் காட்சிகளும் அவன் மனத்தில் விநோத உணர்ச்சியை உண்டாக்குகின்றன. அவன் புதிதாகப் பல விஷயங்களைக் கண்டறிந்திருப்பதாகவுணர்கிறான். அதேபோன்று நாம் ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடியால் பல நக்ஷத்திரங்களைக் காண்கிறோம்; காட்சி சாலைக்குச் சென்று புதிய மிருகங்களைக் காண்கிறோம். அப்போது நூதன அறிவு விருத்திக்கு இடமேற்படுகிறது. நாம் பல சாஸ்திரங்களைக் கற்கிறோம். அவற்றால் 'ஸயன்ஸி'ன் இயற்கை அறிவு அதிகமாகிறது. உலகின்பல் வேறு காரியங்களும் சில விதிகளைத் தழுவியே நடப்பதாகத் தெரிகின்றது. சரித்திரங்கள், சாஸ்திரங்கள் கற்போருக்கு விஷயங்களை நிதானிக்கும் அறிவுண்டாகிறது. இதனால் மனம் விரிவடைகின்றது. உலக சஞ்சாரஞ்செய்து பல்வேறு வகைப்பட்ட மக்களிடத்தில் பழகி அவர்களின் பல்வேறு வகைப்பட்ட நடையுடை பாவனையைக் கவனித்துணர்பவர்கட்கு விஷய அறிவு பன்மடங்கு பெருகி நிற்கிறது. மேற்கூறியவற்றால் விஷய சேகரம் பெறுவது யதார்த்தமாயினும் அதுவே மனோவிருத்தி யென்பது தப்பான காரியமாகும். விஷயங்களைச் சேர்த்துக் குவிப்ப தென்பது மாத்திரமே மனோவிருத்தி யாகாது. அவற்றை ஆராய்ச்சிசெய்து, நம்வசமாக அடக்கியாள்வதே மனோவிருத்தியாம். புதிதாகத் தோன்றும் விஷயங்களைப் பழைய விஷயங்களுடன் ஒத்துக்கலந்து ஒழுங்குபடுத்தல் வேண்டும். இதனாற் றான் விஷயங்கள் தம்முள் கொண்டிருக்கிற சம்பந்தம் வெளித்தோன்ற முடியும். இதனால் தோன்றுவதே அறிவு விளக்கமாகும்.

### விஷய விசாரணை

விஷய விசாரணை செய்யும் இயல்பு பலரிடமும் காணப்படுவதில்லை. பெரிய படிப்பாளிகள் என்று சொல்லப்படுபவர்களிலும் விஷய விசாரணை செய்யாதவர்கள் பலரிருக்கிறார். இவர்கள் பலவிஷயங்களைப்பற்றித் தெரிந்தவர்களாயிருக்கலாம். அவைகளைப்பற்றிச் சொல்லிப்பிறரை மகிழவைக்கலாம்; தாங்களும் மகிழலாம்; ஆனால் அவ்விஷயங்களின் தத்துவங்களைப்பற்றி ஆராய்வது கிடையாது. தத்துவ உணர்ச்சி அவர்களிடம் தோன்றுவதேயில்லை. விஷயஞானம்வேறு; தத்துவ உணர்ச்சி வேறு. இவற்றின் பேதத்தை உணர்தல் வேண்டும். சிலர் விஷயங்களைக் கண்டும் கேட்டும் அவற்றின் உண்மையை ஆராயாது செல்வதால், அவை தரக்கூடிய பெரும்பலனை இழக்கின்றனர். அவர்கள் மூளைக்குள் சமாச்சாரம் அடங்கியிருக்கிறது. அந்த மூளையோ வேலைசெய்து விசாலமடைவதில்லை. கல்வியறிவற்ற யாத்திராவாசிகள் நிலைமையும் இத்தகையதே. தங்கள் யாத்திரா மார்க்கத்தில் காணும் பல காட்சிகளையும் நூதனங்களையும், சினிமாவில் காட்சிகளைப் பார்த்துப்பார்த்துக் கழிப்பதுபோல் கழித்து விடுகிறார்களே யொழிய இவை எக்காரணத்தால் தோன்றின? இவை இவ்வாறு வேலை செய்வதன் காரணமென்ன? இவற்றுள் அமைந்துள்ள சூக்ஷமம் என்ன? என்று ஆராயாது செல்கின்றனர்; யாத்திரை முடிந்த பின்னரும் யாத்திரை ஆரம்பிக்குமுன் இருந்த நிலையிலேயே யிருக்கின்றனர். பல விஷயங்களைக்கண்டும் அவற்றின் உண்மையை உணராத விஷய சேகரம் அறிவுவிருத்தியாகுமோ? இது வெறும் முட்டாள்தனமே யொழிய வேறெதுவுமன்று.

## தேதிகாட்டும் கடிகாரம்

தேதியைக்காட்டும் கடிகாரமொன்று இப்பொழுது கண்டுபிடிக்கப் பட்டுளது. 1929-ம் வருஷம் முதல் 1951-ம் வருஷம் வரை வேண்டிய தேதி கிழமை முதலியவைகளை அந்தக் கடிகாரம் காட்டுகிறது. ஒரு விசை யிருக்கிறது. அதைத்திருகினால் அந்தந்த மாதத்துக்கு வேண்டிய தேதி, கிழமைகள் முதலியன வரிசையாகக் காட்டப்படும்.





# வாஷிங்டன் காட்டிய வழி

(திரு. இரா. கு. நல்லகுற்றாலம் பிள்ளை)

III

### மாணவர் வாழ்க்கை

பிள்ளைகள் கூட்டம் அதிகமாயின் இரவில் படுப்பதற் கிடமில்லாமல் கஷ்டப் படுவதுண்டு. அப்போது பழைய பிள்ளைகளில் சிலர் கூடாரத்திலிருக்க கூடுமானால் சௌகரியமாயிருக்கும் என்பது தலைமை உபாத்தியாயரின்கருத்தாயிருக்கும். அதையறிந்த பிள்ளைகள் பலர் தாமாகவே அவ்விதம் செய்ய முந்திக்கொள்வர். கூடாரங்களால் சில சமயங்களில் குளிரைக்காக்க முடிவதில்லை. சில சமயங்களில் பெருங்காற்று கூடாரங்களையே தூக்கிவிடும். இத்துன்பங்களை எவரும் உபாத்தியாயருக்குச் சொல்வதில்லை. தலைமை உபாத்தியாயர் மனம் சிரமப்பட எவரும் விரும்புவதில்லை. சௌகரிய மாயிருக்கிறதா வென உபாத்தியாயர் விசாரித்த போதும் சௌகரிய மாயிருக்கிறதாகவே பிள்ளைகள் சொல்வார்கள்.

### பரிசுத்த வாழ்வு

பள்ளிக்கூடத்தில் சேர்பவர் அனைவரும் சில நேரம் வரையில் ஏதேனும் ஒருதொழிலை அவசியம்செய்தல்வேண்டும்; பள்ளிக்கூடச் சம்பளத்திற்குப் பிறர் உதவலாம்; சாப்பாட்டிற்கோரொக்கம் செலுத்தல் வேண்டும்; அல்லது உழைத்துக் கழித்தல் வேண்டும். இந்த நிலைமையில் அவர் அவ்வாசல் காவல் வேலையை விட முடியவில்லை. அவர் தமையனார் சிலசமயங்களில் அனுப்பிய பணமும் போதியதாயில்லை. சிறிது காலத்திற்குப் பின் தலைமை உபாத்தியாயரே பள்ளிக்கூடச் சம்பளத்திற்கு வேறு ஏற்பாடுகள் செய்து கொண்டார். பிள்ளைகளின் உடை சுத்தமா யிருக்க வேண்டிய விஷயத்தில் தலைமை உபாத்தியாயர் வெகு சிரத்தை காட்டினார். அடிக்கடி அவரே நேரில் கவனிப்பார். ஆகையால் வாஷிங்டன் ஒரே 'சூட்'டுடனிருக்க முடியவில்லை. அதனால் பழைய உடைகள் சிலவற்றைச் சொற்ப விலைக்கு வாங்கிக் கொண்டார்.

### சிறந்த படிப்பு

ஹேம்ப்டன் பள்ளிக்கூடத்தில் சொல்லி வைத்ததில் படிப்பைக் காட்டிலும் சிறந்தது வேறொன்றுண்டு. அதுவே உபாத்தியாயர்களும் மற்றும் வேலைக்காரர்களும் தியாகிகளாய், சுயநலப் பற்றற்றவர்களாய் வாழ்ந்தமை. அவர்கள் பிள்ளைகளிடம் காட்டிவந்த அன்பும், இரவிலும் பகலிலும் வெயிலிலும் பனியிலும் பிள்ளைகள் சௌகரியத்திலும் அபிவிருத்தியிலும் ஆத்திர முடையவர்களாய் அவைகளுக்கான முயற்சிகளிலேயே தங்கள் நேரத்தையெல்லாம் அவர்கள் செலவழித்த பண்பும் பெரிய படிப்பினையாகவிருந்தது. பிள்ளைகள் சந்தோஷமாக இருக்கக் காண்பதே அவர்கள் அவா. பிள்ளைகளுக்கு ஏதேனும் உதவி செய்துகொண் டிருப்பதே அவர்களுக்குச் சந்தோஷமாகும். வாஷிங்டனே அங்குள்ளவர்களில் இள வயதுடையவர்; நாற்பது வயதானவர்களும் அவருடன் படித்தார்கள்.

### ஓட்டலில் வேலை

முதல் விடுமுறையில் ஊருக்குப் போகப் பணமில்லை; ஹேம்ப்டனிலேயே ஒருஹோட்டலில் வேலைபார்த்தார். அதில் 16 டாலர்கூடக் கிடைக்கவில்லை. இரண்டாவது விடுமுறையில் தாயாரும் தமையனாரும் அனுப்பிய பணத்துடன் ஓர் உபாத்தியாயருதவிய பணத்தையும் கொண்டு ஊர்வந்து சேர்ந்தார். ஊரெங்கும் வேலை நிறுத்தமா யிருந்ததால் ஊரில் வேலைபார்க்க முடியவில்லை. வேலை நிறுத்தத்தால் தொழிலாளிகள் அனுபவித்தது சங்கடமே.

### பள்ளியைச் சுத்தம் செய்தல்

வாஷிங்டன் படித்துவந்ததில் ஊரார் எல்லோருக்கும் அளவு கடந்த ஆனந்தம்; ஊருக்குச் சென்றதும் ஒவ்வொரு வீட்டிலும் அவருக்கு விருந்து நடந்தது. அவர்களுக்கு வாஷிங்டன் தம் அனுபவமெல்லாவற்றையும் சொன்னார். வேலையில்லாம லிருக்கிறோமே யென்ற கவலை அவரை வாட்டியது; வேலை நாடிப் பக்கத்திலுள்ள ஊர்போயிருந்தபோது தாயார் மரணமெய்தினார். தாயார் தம் மரண தசையில் பக்கத்திலிருந்து உதவவேண்டுமென்ற ஆசையோடிருந்த வாஷிங்டனுக்குத் தரித்திரம் அவ்வாறு உதவவொட்டாமல் செய்து விட்டதில் மிகுந்த வருத்தம். தங்கைக்கு வீட்டு வேலைகள் பழக்கமில்லை. வீட்டு வேலைகளைச் சரியாய்க் கவனிக்க முடியவில்லை; சமையல் செய்யத்தெரியவில்லை; வாஷிங்டனுக்கும் நல்ல சாப்பாடுகிடையாது. இந்தநிலைமையில் அவர் பழைய எஜமானியிடம் வேலைக்கமர்ந்தார்; அதற்குப்பின் பக்கத்து ஊர் சுரங்கத்திலும் வேலைபார்த்து வந்தார். பள்ளிக்கூடம் திறக்க மூன்று வாரம் இருந்தபோதே பள்ளிக்கூடத்தைச் சுத்தம் செய்வதற்காக வந்து சேரவேண்டுமென்று தலைமை உபாத்தியாயரிடமிருந்து கடிதம்வர வாஷிங்டன் ஹேம்ப்டனுக்குப் போய்விட்டார். செல்வத்தில் பிறந்தும் செல்வத்தில் வளர்ந்தும் நீகிரோவர்களின் அபிவிருத்திக்காகத் தம்மையே அர்ப்பணம் செய்துள்ள தலைமை உபாத்தியாயராகிய அந்த அமெரிக்கமாது வாஷிங்டனுடன் கட்டிடத்தைச்சுத்தம் செய்துவந்தார். அவ்வம்மையார் சன்னல் முதலியவைகளைச்சுத்தம் செய்ததை அவர் என்றும் மறத்தற்கில்லை. அதுமுதல் உழைப்பு, கேவலமென்பதை வாஷிங்டன் உணர்ந்தது மட்டுமன்று; அதனால் ஊதியத்திற்காகவன்றிச் சுதந்திரம், சுகம், சுயநம்பிக்கை, பிறர்க்குபகாரமான ஒரு காரியத்தை செய்கிறோமென்கிற பெருமித நினைப்பு, ஆனந்தம் முதலியவற்றிற் காகவும் நாம் உழைக்கிறோம் என்பதையும், அதனால் ஒவ்வொருவரும் ஓயாது உழைக்க வேண்டுமென்பதையும் அவர் உணர்ந்தார். அதன்பின் வாஷிங்டன் உழைப்பின் பெருமையைப் பற்றிப் பேசாத நாளேயில்லையென்று சொல்லலாம்; உழைப்பின் பெருமையைப் போதியாத பள்ளிக்கூடங்களை அவர் பள்ளிக்கூடமாகக் கருதினதுமில்லை; வாஷிங்டன் அந்தப்பள்ளிக்கூடத்தில் படித்து வந்த மற்ற வருஷங்களிலும் கட்டிடத்தைச்சுத்தம் செய்யும் வேலையைத் தலைமை உபாத்தியாயருடன் தாமே செய்துவந்தார்.

### இளமை அவா

அந்தத் தலைமை உபாத்தியாயர் வாஷிங்டனுக்குப் பொதுக்கூட்டங்களில் பேசும்திறமையை உண்டாக்கினார். வாஷிங்டனுக்குப் பேச்சுக்காகப் பேசுவதில் எப்போதும் பிரியமிருந்ததில்லை; "உலகாபிவிர்த்திக்கான காரியங்களைச் செய்யவேண்டும்; அதைப்பற்றிப் பேசவேண்டும்" என்ற ஆசை அவருக்கு இளமையிலிருந்தே உடன் வளர்ந்தது. அப்படியே செய்யவும் பேசவும் அவருக்குச் சாத்தியமாயிற்று.

### மறுபடியும் ஓட்டல் வேலை

படிப்பு முடிந்ததும் ஊருக்குத் திரும்பும் செலவுக்காக வாஷிங்டன் ஒரு ஹோட்டலில் வேலை தேடினார். அங்கு வாடிக்கைக்காரர் தேவைகளைக் கவனிக்கும் வேலையில் அமர்த்தப்பட்டார். அதைச் சரியாய் நிர்வகிக்க முடியவில்லை. அதனால் அவ்வேலை பார்க்கும் ஒருவருக்கு உதவியாக நியமிக்கப்பட்டார். பின் சிறிது நாளைக் கெல்லாம் பழகித் தேர்ந்த பின் திரும்பவும் முதல் வேலைக்கு நியமிக்கப் பட்டார். இந்த ஹோட்டல் அனுபவத்துடன் ஊர் வந்து சேர்ந்தார்.

### சொந்தப் பள்ளிக்கூடம்

வாஷிங்டன் சொந்த ஊருக்கு வந்ததும் பள்ளிக்கூடம் வைத்துப் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். புத்தகப் படிப்புப் போதாதென்பதை அவர் அறிவாராதலால், பிள்ளைகளைச் சுத்தமாக வரும்படி செய்தார். தினந்தோறும் பல்லைப் பிரஷால் துலக்கி வரவேண்டுமென்பது அவர்களுக்குக் கட்டளை. அதோடு தலையைச் சீவிவரவேண்டும்; முகம் கைகால்கள் உடல் உடை முதலியவற்றை எப்போதும் சுத்தமாய் வைத்துக்கொள்ளுதல் வேண்டும். தினந்தோறும் குளித்துவர வேண்டும் என்று வற்புறுத்துவார். காலையில் 8-மணிக்குப் பள்ளிக்கூடம் ஆரம்பமாகும்; இரவு 10-மணி வரை நடக்கும். பகலில் வருவதைக் காட்டிலும் இரவில் அதிகக்கூட்டம். 50-வயதுக்கு மேற்பட்டவர்கள் சிலரும் படிக்க வருவதுண்டு. அதுவே மிக உருக்கமாயிருக்கும். ஒரு வாசக சாலையையும் ஒருவிவாத சங்கத்தையும் அவர் நடத்தி வந்தார். சம்பளத்தை எதிர்பாராமலும் அதைப்பற்றிச் சிறிதும் கவனியாமலும் படிக்கவிரும்பியவர்களுக்கெல்லாம் பாடஞ்சொல்லியும் வந்தார்; ஹேம்ப்டன் பள்ளிக்கூடத்தில் சேர்வதற்கு லாயக்காகவும் சிலருக்குப் பாடஞ்சொல்லிவந்தார். அப்படிப் படித்தவரில் அவரது தமையனார் ஒருவர். தாம் படியாமல் தம்பியைப் படிக்க வைத்த தமையனாரும் தம்பியால் படித்து முன்னிலைக்கு வந்துவிட்டார். மற்றவர்களுக்கு உதவக் கூடியதான சந்தர்ப்பம் வாய்த்தமையே வாஷிங்டனுக்குப் பெரு மகிழ்ச்சியாயிருந்தது.

"நவசக்தி" ஆசிரியர்

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

## இயற்றிய நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| பெரியபுராணம்—அரும்பத விசேட ஆராய்ச்சிக் குறிப்புரையும் வசனமும் .... .... .... | 7 | 0 |
| மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் .... .... | 2 | 8 |
| பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை .... | 2 | 0 |
| தமிழ்த் தென்றல் .... .... .... | 2 | 0 |
| தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத்திரட்டு—இரண்டு பகுதி | 3 | 0 |
| நாயன்மார் வரலாறு ... ... .... | 1 | 8 |
| முருகன் அல்லது அழகு .... .... .... | 1 | 0 |
| இராமலிங்கசுவாமிகள் திருவுள்ளம் .... .... | 0 | 12 |
| என்கடன் பணிசெய்து கிடப்பதே .... .... | 0 | 8 |
| சைவத்தின் சமரசம் .... .... .... | 0 | 8 |
| சைவத்திறவு .... .... .... .... | 0 | 8 |
| சமரச சன்மார்க்க போதம் .... .... ... | 0 | 8 |
| சமரச சன்மார்க்கத் திறவு ... .... | 0 | 4 |
| சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து .... .... | 0 | 8 |
| தமிழ்நாடும் நம்மாழ்வாரும் .... .... .... | 0 | 8 |
| இமயமலை அல்லது தியானம் .... .... | 0 | 6 |
| காரைக்காலம்மையார் திருமுறை—அரும்பதக் குறிப்புரையுடன் .... .... .... | 0 | 6 |
| கடவுள் காட்சியும் தாயுமானவரும் .... .... | 0 | 4 |
| தமிழ் நூல்களில் பௌத்தம் ... .... | 0 | 4 |
| உரிமைவேட்கை அல்லது நாட்டுப்பாடல்.... .... | 0 | 4 |
| முருகன் அருள் வேட்டல் .... .... .... | 0 | 4 |
| நாயன்மார் திறம் .... .... .... | 0 | 4 |
| சமரச தீபம் .... .... .... | 0 | 2 |
| நினைப்பவர் மனம் .... .... .... | 0 | 2 |
| சைவ சமய சாரம் .... .... .... | 0 | 1 |
| சித்த மார்க்கம் .... .... ... | 0 | 6 |

*இந்நூல்கள் எல்லாவற்றையும் ஒரே காலத்தில் வாங்குவோர்க்குத் தபாற்செலவின்றி மணியார்டர் கமிஷன் கழித்து அவைகள் வி.பி.-யில் அனுப்பப்படும். மலேயா, சிலோன் முதலிய இடங்கட்கு வி. பி. அனுப்பப்படமாட்டா; முன்பணம் அனுப்பல் வேண்டும்.*

முருகவேள் புத்தகசாலை,
12, கணபதிமுதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.

போலிகள்பால் ஜாக்கிரதை

SOVEREIGN-REMEDY
AMRUTANJAN
Best Indian Pain Balm
Amrutanjan Depot
BOMBAY, MADRAS

## அமிர்தாஞ்சனம்

எல்லா நோய்களுக்கும், வலிகளுக்கும்
மிக்க மேலான இந்திய பாம்.

## மேருமந்தர புராணம்

மூலமும் உரையும்

Prof. A. சக்ரவர்த்தி நயினர், M.A., I.E.S. அவர்களால் பதிப்பிக்கப்பட்டன.

விலை ரூபா 6. தபால் சார்ஜ் வேறு.

வெளிவந்துவிட்டன! வெளிவந்துவிட்டன!!

சிறுபஞ்சகாவியத்தில் ஒன்றாகிய

## நீலகேசி மூலமும் உரையும்

இதுவரை அச்சில் வாராதிருந்த நீலகேசி மூலமும் உரையும், Prof. A. சக்ரவர்த்தி நயினர், M.A., I.E.S. அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட விரிவான ஆராய்ச்சி உரையுடனும், அரும்பொருட் குறிப்புகளுடனும் வெளி வந்துவிட்டன.

800 பக்கங்களுக்கு மேலுள்ள சுத்தமான அழகிய பதிப்பு.

விலை ரூபா **5.** தபால் சார்ஜு வேறு.

முருகவேள் புத்தகசாலை,
12, கணபதிமுதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.

குமாரசஞ்சீவினி
ரிஜிஸ்டர்ட்
குழந்தைகளின்
ஈரல்-குலை-ஜுரக்கட்டி
வியாதிகளுக்கு
நிகரற்ற குணமுடையது
வைத்தியர். அண்ணாமலை முதலியார்,
வைத்தியர் அண்ணாமலை தெரு, மயிலாப்பூர், சென்னை

## TESTIMONIAL

Rao Sahib — 4, *Salai Street, Mylapore*
**V. Totadri Ayyangar** — 23rd February 1936.

I have very great pleasure in testifying to the efficacy of the medicines and treatment given by Dr. Annamalai Vaidyar of Mylapore for enlarged liver and spleen. My child was very bad, and the Doctor undertook the treatment in a rather advanced stage and has successfully completed the treatment and the child is quite hale and healthy now. * * * His medicines for treatment of Liver are comparatively less costly and more efficacious. * * *

V. TOTADRI,
*Inspector of Police, C.I.D., Madras.*

## திருவள்ளுவர் பெருமை

திருவள்ளுவரின் வாழ்க்கை நுட்பங்களையும், பாடல்களின் கருத்துக்களையும் தெள்ளிதில் விளக்கும். **ஸ்ரீஜத் வ. மு. இரத்தினேஸ்வரையர்** இயற்றியது. பாக்கெட் சைஸ் 125 பக்கம் விலை அணா 4. தபால் செலவுக்கு இரண்டணா சேர்த்து ஆறணா ஸ்டாம்பு அனுப்புவோர் பெறலாம்.

நவீன கதா புத்தகசாலை
58, தம்புசெட்டித் தெரு, சென்னை.

சிவஞான பாடியம் என்னும்

## திராவிட மாபாடியம்

மெய்கண்ட தேவர் அருளிச்செய்த சிவஞானபோதத்துக்குச் சிவஞான சுவாமிகள் வரைந்த சிவஞான பாடியமென்னும் திராவிட மாபாடியம் வெளியாகிவிட்டது.

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார்
ஆராய்ச்சி முறையில் எழுதிய
**முன்னுரையும்**
சேர்க்கப்பட்டிருக்கிறது.

தனிப்பிரதி விலை ரூபா 1. 11 பிரதிகள் விலை ரூபா 10.

முருகவேள் புத்தகசாலை,
12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.

## விநாயகர் பனுவல் திரட்டு

இரண்டாம் பதிப்பு—விலை அணா 6.

இத்திரட்டில், நம்பியாண்டார் நம்பி அருளிச் செய்த திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை, கபிலதேவ நாயனர் அருளிச் செய்த மூத்த நாயனர் திருவிரட்டை மணிமாலை, அதிராவடிகள் அருளிச் செய்த மூத்த பிள்ளையார் திரு மும்மணிக்கோவை, ஔவையார் அருளிச்செய்த விநாயகர் அகவல், விநாயககவசம், சிவஞானசுவாமிகளருளிச் செய்த திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், இராமலிங்கசுவாமிகளருளிச்செய்த சித்தி விநாயகர்பதிகம், கணேசத் திருவருண்மாலை, சிவஞான தேசிகர் அருளிச் செய்த காசித் துண்டி விநாயகர் திருவருட்பா, மாம்பழக் கவிச்சிங்கர் இயற்றிய விநாயக மூர்த்தி பதிகம், சிவபுராணங்களிலுள்ள விநாயக தோத்திரங்கள் முதலியன அடங்கியுள்ளன. இந்நூல் தடித்த பளபளப்பான கடிதத்தில் சுத்தமாகப் பதிக்கப்பட்டுள்ளது.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

Printed at the Sadhu Press: Published by T. V. Kalyanasundaran (Editor) 12, Ganapathi Mudali Street, Royapettah, Madras.

